# ஜனசக்தி

ஆசிரியர்: எம். கல்யாணசுந்தரம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் வார ஏடு

மலர் 28 | விலை 30 காசுகள் | 5-3-72 | இதழ் 31


# மொழிக் கவர்ச்சி உண்டு

# கொள்கை அழகு இல்லை

## தமிழக பட்ஜெட் பற்றி தோழர் எம். கல்யாணசுந்தரம் எம்.பி.

மார்ச் முதல் நாளன்று தமிழக அரசாங்கத்தின் இந்த ஆண்டுக்கான வரவுசெலவுத் திட்டம் சட்டசபையின் முன்பு வைக்கப்பட்டுள்ளது. இந்த வரவு செலவுத் திட்டம் பற்றி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாநிலக்குழுச் செயலாளர் தோழர் எம். கல்யாண சுந்தரம் தெரிவித்த கருத்துக்கள் பின் வருமாறு:—

விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தவும் விவசாயிகளின் உற்பத்திப் பொருள்களுக்கு நியாய விலை கிடைக்கவும் உறுதியான நடவடிக்கை எடுக்கப்படவில்லை. அதற்குமாறாக தமிழ்நாடு வாணிபக் கழகம் என்ற பெயரால், உணவுப் பொருள் வியாபாரத்தை 51 கொள்ளை லாபக்காரர்கள் கையில் விடப்பட்டுள்ளது. அதற்குச் சட்ட மன்ற அங்கீகாரத்தைப் பெறுவதற்கு பட்ஜெட் உரையில் இடமளிக்கப் பட்டுள்ளது.

விவசாயிகளைப் பொறுத்த வரையில் கடன் நிவாரணச் சட்டம் கொண்டுவர முன்வந்திருப்பதும், சாகுபடியாளர்களுக்குக் குத்தகை பாக்கியை வஜாசெய்ய முன்வந்திருப்பதும் வரவேற்கத்தக்க அம்சங்களாகும். நிலச்சீர்திருத்தம் சம்பந்தப்பட்ட வகையில், அறக் கட்டளைகளின் பேரால், வைத்துள்ள நிலங்களுக்கு உச்சவரம்புச் சட்டத்திலிருந்து அளித்துள்ள விதிவிலக்கில் வரவேற்கத் தகுந்த மாற்றம் செய்ய அரசு முன்வந்துள்ளது. ஆனால் நில உச்சவரம்பு அளவு குடும்பத்துக்கு 60 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று இருப்பதை 40 ஸ்டாண்டர்டு ஏக்கர் என்று திருத்தப்போவதாகக் கூறி இருப்பது ஏமாற்றுக் கலையாகும். மைனர் குழந்தைகள் உள்பட, நபருக்கு 15 ஏக்கர் வைத்துக்கொள்ள ஏற்கனவே உரிமை கொடுத்து திமுக அரசு இயற்றிய சட்டத்தின்படி, எல்லோரும் மாற்றி நிலத்தைப் பிரித்துக்கொண்டு விட்டனர். இந்தச் சூழ்நிலையில் 40 ஏக்கருக்குமேல் வைத்திருக்கக் கூடிய குடும்பங்கள் புதிய சட்டத்தின் கைகளுக்குச் சிக்காது. நபருக்கு 7 ஏக்கருக்கு மேற்படாமல் நபருக்கு உச்சவரம்பு நிர்ணயிக்கவேண்டிய கட்டம் வந்துள்ளது.

நகர்ப்புறச் சொத்துகளுக்கு உச்சவரம்பு நிர்ணயிப்பது, மலைத் தோட்டங்களுக்கு உச்சவரம்பு நிர்ணயிப்பது போன்ற பிரச்சினைகள் மௌனமாக விடப்பட்டுள்ளன.

சிற்சில பிரச்சினைகளில் வரவேற்கத்தகுந்த முயற்சிகள் இருந்தபோதிலும் இந்த பட்ஜெட் உரையும் வழக்கம்போல் ஒரு சம்பிரதாய அறிக்கைதான். பட்ஜெட் அறிக்கையில் முதல்வருடைய சொந்த நடையில் எழுதப்பட்ட மொழிக் கவர்ச்சி உள்ளது. கொள்கைக் கவர்ச்சி இல்லை.

மாநில சுயாட்சி கோஷத்துக்கு பட்ஜெட் உரையில் கொடுக்கப்பட்டுள்ள அளவு கடந்த முக்கியத்வம் பொருளாதாரத் துறையிலும் சமுதாயத் துறையிலும் பின்பற்றுகின்ற பழைமைக் கருத்துகளுக்கு "பொன்துகில்" அணிவித்து அழகுபடுத்துவதாக உள்ளது.

இன்று போராடிக் கொண்டிருக்கும் பஞ்சாலைத் தொழிலாளர்கள், நகரசுத்தித் தொழிலாளர்கள், பள்ளி ஆசிரியர்கள், பட்டதாரி ஆசிரியர்கள், என்.ஜி.ஓ.க்கள் முதலியோர் ஏமாற்றம் அடைந்துள்ளனர். அவர்களுடைய பிரச்சினைகள் அலட்சியப்படுத்தப்பட்டுள்ளன.



## ஏமாற்றம்! ஏமாற்றம்! பட்டதாரி ஆசிரியர் கழகக் கருத்து

1972-73ஆம் வருட தமிழக அரசு பட்ஜெட் பற்றித் தமிழகப் பட்டதாரி ஆசிரியர் கழகத்தின் கருத்துக்கள் வருமாறு:

கடந்த ஆண்டு தமிழக அரசின் இரண்டாம் ஊதியக் குழுவில் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ஏற்பட்ட மிகப் பெரும் குறைகளை அனைவரும் அறிவார்கள். அவற்றைப் போக்கி ஆவன செய்ய வேண்டினோம். அரசும், அமைச்சர்களும், அதிகாரிகளும், சட்டமன்ற உறுப்பினர்களும், எங்கள் கோரிக்கை நியாயமானது என ஏற்றுக் கொண்டனர். தேர்தல் முடிந்ததும் எங்கள் குறைகளை போக்கி ஆவன செய்வதாக முதலமைச்சர் உறுதி கூறினார்கள். அவரது வாக்குறுதிக்கிணங்க பட்டதாரி ஆசிரியர்கள் ஓராண்டு காலம் அமைதியாகக் காத்திருந்தனர். கடந்த ஜனவரி மாதம் திடீரென எங்கள் கோரிக்கைகள் மறுக்கப்பட்டதாக அரசு ஆணை வெளியிட்டதை அறிந்து அதிர்ச்சி அடைந்தோம்.

உடனே மேலவையில் பிரச்சினையின் அவசரத்தன்மை பற்றியும், அது உடனே தீர்க்கப் படவேண்டும் என்றும், ஆசிரியத் தொகுதி, பட்டதாரித் தொகுதி, மேலவை உறுப்பினர்கள் மேலவையில் வற்புறுத்தினர். அதற்கு முதலமைச்சர் அளித்த பதில் பிரச்சினைக்கு உடனடி பரிகாரம் வழங்குவதாக அமையவில்லை.

இன்று வெளியிடப்பட்ட பட்ஜெட்டிலாவது அக்கோரிக்கைகள் நிறைவேறுமென எதிர்பார்த்திருந்தோம். ஆனால், பெருத்த ஏமாற்றமே அடைந்தோம்.

சென்ற ஆண்டு அமைக்கப்பட்ட "அனமலீ கமிஷன்" அறிக்கையே இன்னும் வெளிவராதபோது மீண்டும் ஒரு "அனுமலீஸ் கமிஷன்" அமைத்திருப்பது பட்டதாரி ஆசிரியர்களுக்கு நம்பிக்கை ஊட்டுவதாக இல்லை. காலம் கடத்த இது வழிவகுக்குமே தவிர பிரச்சினைக்கு உடனடி நிவாரணம் காண உதவுவதாக இல்லை. பட்டதாரி ஆசிரியர்களுக்கு நம்பிக்கையூட்டும் வகையில் தற்போதே அவர்களுக்கு இடைக்கால நிவாரணத்தையாவது அறிவித்து விட்டு இக்குழுவை அமைத்திருக்க வேண்டும்.

வாழ்க்கைச் செலவுப் புள்ளி உயர்வுக்கேற்ப மத்திய அரசும், பிற மாநில அரசுகளும் அனைத்து ஊழியர்களுக்கும் பஞ்சப் படியை உயர்த்தியுள்ளபோது நமது மாநில பட்ஜெட்டில் மட்டும் ஏதுமில்லை என்பது வருந்தத்தக்கதாக உள்ளது.

ஆவலோடு எதிர்பார்த்த அனைத்து ஊழியர்களுக்கும், மருத்துவப் படியோ, இடைவேறுபாடு கருதாது வீட்டு வாடகைப்படியோ அறிவிக்காதது பெருத்த ஏமாற்றத்தைத் தருகிறது.




## மாநிலம் முழுதும் பஞ்சாலை வேலை நிறுத்தம்

கோவைத் தொழிலாளர் போராட்டத்துக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் தமிழ்நாடு முழுவதும் பஞ்சாலைத் தொழிலாளர்கள் 2-3-72 நள்ளிரவு முதல் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.

ஏஐடியூசி, ஐஎன்டியூசி, சிஐடியூ, எச்எம்எஸ் ஆகிய நான்குசங்கங்களின் கூட்டு வேண்டுகோளின்படி இந்த வேலைநிறுத்தம் தொடங்கியது.

## கோவை முழு அடைப்பு முழு வெற்றி

போராடும் கோவை பஞ்சாலைத் தொழிலாளர்களுக்காதரவாக மார்ச் முதல் நாளன்று கோவை மாவட்டம் முழுதும் முழு அடைப்பு (பந்த்) வெற்றிகரமாக நடைபெற்றது.

வியாபார ஸ்தலங்கள், பள்ளிகள், கல்லூரிகள், தொழிற்சாலைகள் அனைத்தும் மாவட்டம் முழுதும் மூடப்பட்டன.

### ஓடாத சேரன்!

சேரன் போக்குவரத்துக் கழகம் அன்றுதான் தனது முதல் நாள் பணியைப் பொள்ளாச்சியிலிருந்து தொடங்க வேண்டும். ஆரம்ப தினத்தன்றே சேரன் போக்குவரத்துக் கழகத்தின் எந்தப்பஸ்ஸும் ஓடவில்லை!

மதுபானக் கடைகள் மாவட்டம் முழுதும் மூடப்பட்டிருந்தன.

அனைத்துப் போக்குவரத்துக்களும், விமான சர்வீஸ் உட்பட நிறுத்தப்பட்டன.

மாவட்டம் முழுதும் தெருக்கள் வெறிச்சோடிக் கிடந்தன.

பொது வேலைநிறுத்தத்தை வெற்றிகரமாகவும் அமைதியாகவும் நடத்திக் கொடுத்தபொதுமக்களுக்கு கூட்டுப் போராட்டக்குழு தனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டுள்ளது.

## சட்டசபையில் வெளிநடப்பு

கோவை பஞ்சாலைத் தொழிலாளர் போராட்டம், கம்யூனிஸ்ட் தலைவர்கள் தாக்கப்பட்டது போன்றவற்றின்மீது சட்டமன்றத்தின் நிகழ்ச்சிகளை ஒத்தி வைத்து விவாதிக்கக் கோரி அனுமதி மறுக்கப்பட்டதால் 1-3-72 அன்று கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்தனர்.

# ஜனசக்தி

மலர் 28 | 5-3-72 | இதழ் 31


## உபரி பட்ஜெட்டால் உருப்படியான பலன் உண்டா?

1972-'73ம் ஆண்டுக்கான தமிழக அரசாங்கத்தின் வரவு-செலவுத் திட்டம் சட்டசபையில் வைக்கப்பட்டுள்ளது. இரண்டரைக்கோடி ரூபாய்களுக்கு மேல் உபரியாக உள்ள வரவு-செலவுத் திட்டத்தை வகுத்து அளித்ததில் முதல்வர் கருணாநிதியும் அவரைச் சார்ந்துள்ளவர்களும் பெருமைபட்டுக் கொள்கின்றனர். சமதர்ம பட்ஜெட் என்றுகூட அதற்குப் புகழ்மாலை சூட்டுகின்றனர்.

அறிவிக்கப்பட்டுள்ள சலுகைகள், சீர்திருத்தங்கள் முதலிய அழகுப் போர்வைகளை விலக்கி விட்டு நுணுகி ஆராயும் பொழுதுதான் இந்த வரவு-செலவுத் திட்டத்தின் உண்மையான சொரூபம் வெளியாகிறது. சாமானிய மக்கள் அன்றாடப்பிரச்சினைகளை இந்தத்திட்டம் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை என்பது கவலை தரும் அம்சமாகும்.

இன்று உள்ள உடனடிப் பிரச்சினை, ஏகத்தாறுக விலைவாசிகள் உயர்ந்துவிட்டபடியால் மக்களுடைய வாழ்க்கையில் தோன்றியுள்ள பயங்கரமான நெருக்கடியாகும். போரின் பெயரைச் சொல்லிக்கொண்டு படிஆரிசித் திட்டமும் எடுக்கப்பட்டு விட்ட நிலையில், விலைவாசியைக் குறைப்பதற்கான நடவடிக்கை ஏதாவது பட்ஜெட்டில் வரும் என்று தமிழக மக்கள் அனைவருமே ஆவலுடன் எதிர்பார்த்தனர்.

அந்த ஆவலையும் எதிர்பார்ப்பையும் கருணாநிதியின் பட்ஜெட் சிதறடித்து விட்டது.

மக்களைப் பாதிக்கும் புதிய வரிகள் ஏதும் இல்லை என்று மகிழ்ச்சியடையக் கூட இந்தப் பட்ஜெட்டில் எதுவும் கிடையாது ஏனெனில், இந்தத் திட்டத்தில் வெளிப்படையாகக் கொண்டுவரப்படாவிட்டாலும், ஏற்கனவே விதிக்கப்பட்டு மக்களை நசுக்கிக் கொண்டுள்ள வரிச்சுமையைக் குறைக்கும் நடவடிக்கை எடுக்கப்படவில்லை. உபரி, உபரி என்று தம்பட்டம் அடிப்பதைவிட, அந்த உபரியைக் கொண்டு, வரிச்சலுகைகள் அளித்திருக்கலாம். அண்மையில் விவசாயிகளுக்கு உயர்த்தப்பட்ட மின் கட்டணத்தைக் குறைத்திருக்கலாம்.

மதுவிலக்குக் கைவிடப்பட்டதன் விளைவாக எதிர்பார்த்ததை விடவும் இரண்டு மடங்கு அதிக வருவாய் அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ளது. ஆனால், அந்த அதிகரித்த வருமானம், மக்களுக்கு எந்தவித நிவாரணத்தையும் தரவில்லை. மாறாக, உபரி, உபரி என்று அரசாங்கம் பெருமைப்பட்டுக்கொள்ளத்தான பயன்படுள்ளது.

தமிழகத்தில் இன்று போராடாத தொழிலாளிகளின் பகுதிகளே கிடையாது எனச் சொல்லலாம். குறிப்பாகக் கோவையில் நடைபெறும் பஞ்சாலைத் தொழிலாளர்களின் ஜீவமரணப்போராட்டம் அனைத்து மக்களுடைய ஒருமித்த ஆதரவைப் பெற்றுள்ளது. மற்றும் பட்டதாரிஆசிரியர்கள், அரசாங்க அலுவலர்கள் முதலியவர்களுடைய பிரச்சினைகளும் போராட்டக் கட்டத்தை அடைந்துள்ளன.

இந்த நிலையில் உள்ள பிரச்சினைகளுக்கெல்லாம் கமிட்டிகளைப் போட்டுள்ளது, வெறும் காலம் கடத்தும் தந்திரமேயாகும். பிரச்சினைகளைத் தீர்க்க இவைகள் உதவமாட்டா.

அறநிலயங்கள், நில உச்சவரம்பில் பெற்றுள்ள விதிவிலக்கு நீக்கம், கடன், குத்தகை பாக்கி நிவாரணம் முதலிய நடவடிக்கைகள் வரவேற்கத்தக்கவைதான். ஆனாலும், நீண்டகாலத்துக்கு முன்பே வந்திருக்க வேண்டிய அவைகள் காலம் கடந்து வந்துள்ளன அவைகளால் ஏற்படக்கூடிய பலன்களைப் பற்றி ஐயமின்றிக் கூற நம்மால் இயலவில்லை.

பொதுவாகப் பார்த்தால் அழகான சொற்களாலும், அலங்காரப் பேச்சாலும் போர்த்தி மறைக்கப்பட்டுள்ள படு சாதாரணமான பட்ஜெட் இது.

பெரிதாக எதையும் எதிர்பாராதவர்களுக்குக்கூட வெறும் ஏமாற்ற உணர்ச்சியையே இது தருகிறது.

## வன்முறை தொடர்ந்தால்

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் பரவலான வன்முறை நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகள் வந்தவண்ணமாக உள்ளன. ஆளும் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்களும் அவர்களுடைய அடியாட்களும், மாற்றுக் கட்சியினரைத் தாக்குவது அதிகரித்துக் கொண்டே உள்ளது.

குறிப்பாகஇளைஞர்களும், மாணவர்களும், உழைக்கும் மக்களும் தங்களுடைய கோரிக்கைகளுக்காகப் போராடும் இடங்களில் இந்த வன்முறைகள் அதிகம் தலையெடுக்கின்றன. மண்டபம், திருப்பத்தூர், திருவையாறு, சென்னை, குடியாத்தம் என்று பட்டியல் தொடருகிறது. பொதுவில் தமிழகம் முழுமையிலும், குறிப்பாக இராமநாதபுரம் மாவட்டத்தில் இந்தப் பேயாட்டம் தலைவிரித்தாடுகிறது.

இந்த வன்முறைகள் அனைத்துக்குமே ஒரே மாதிரியான பின்னணி இருப்பதை, ஊன்றிக் கவனித்தால் அறிய முடியும். ஆளும் கட்சியின் அடியாட்கள் தாக்குவார்கள். அந்த இடத்தில் உள்ள போலீசார் அதைப் பார்த்துக் கொண்டு செயலற்று இருக்கவேண்டிய நிலைக்கு உள்ளாக்கப்படுவார்கள்.

இந்த நிலை இப்படியே நீடித்தால், ஆட்சி எந்திரத்தின் ஆதரவோடு, சமூக விரோத சக்திகள் தமது செயல்களை விருப்பம்போல் நடத்தி முடித்துக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டால் கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஒன்றை மட்டும் நினைவுபடுத்த விரும்புகிறோம். எத்தனை அடித்தாலும் எதிரிகள் தாங்கிக் கொண்டே இருப்பார்கள் என்று மட்டும் கனவுகாண வேண்டாம்.

அதிகார வர்க்கத்தின் [illegible] நம்புவதனாலேயே இந்தகுதி கிரமங்கள் என்றும்வெற்றிபெறும் என்ற மமதை செல்லுபடியாகப் போவதில்லை.

---

திருப்பத்தூரில்

# மாணவர்கள் தாக்கப்பட்டனர்

## கல்லூரி நிர்வாகத்தின் காட்டுமிராண்டித்தனம்

முகவை மாவட்டம் திருப்பத்தூரில் ஆறுமுகம் பிள்ளை சீதையம்மாள் கலைக் கல்லூரி உள்ளது. அங்கு மாணவர்கள் தங்களுக்குச் சங்கம் வைக்க உரிமை வேண்டுமென்று கோரிக்கை எழுப்பி வந்தனர். கல்லூரி முதல்வர் ஆவன செய்வதாக வாக்குறுதி அளித்தார். மீண்டும் கோரிக்கை நிறைவேறாததால், 1971ம் ஆண்டு நவம்பர் மாதம் 16ம் தேதி மாணவர்கள் அமைதியான ஆர்ப்பாட்டம் நடத்தினர். பின் கல்லூரி முதல்வர் தலையிட்டு நிர்வாகிகளைக் கலந்து சொல்கிறேன் என்ருர். மாணவர்களும் ஏற்றுக்கொண்டனர்.

ஆனால், கல்லூரி முதல்வருக்கும் நிர்வாகத்தினருக்கும் நடந்த பேச்சுவார்த்தை தோல்வியடைந்ததால் மாணவர்களிடம் கல்லூரியில் சங்கம் வைக்க அனுமதிக்க முடியாது என்று கல்லூரி முதல்வர் கூறிவிட்டார். அத்துடன் நவம்பர் 13ந்தேதி கல்லூரியை மூடிவிட்டு விடுதியையும் காலி செய்யச்சொல்லி, மாலை சுமார் 6 மணிக்கு தகவல் கொடுக்கப்பட்டது. மாணவர்கள் அடக்கத்துடன் நிர்வாகிகளைப் பார்த்து, எங்களுக்கெல்லாம் அருகில் வீடு இல்லையே, இந்த இரவில் நாங்கள் எங்கே செல்வது? ஆகவே, காலைவரை விடுதியிலேயே இருக்கின்ருேம் எனக் கூறி இருந்தனர். அம் மாணவர்களுக்கு சமைத்த இரவு உணவை அவர்களுக்குப் போடாமல், குண்டர்களுக்குப் போட்டு, திடீரென்று மாணவர்களைத் தாக்கினர். இச் சம்பவத்திற்குப் பிறகு மீண்டும் கல்லூரி டிசம்பர் 4ம் தேதிவரை மூடப்பட்டிருந்தது. 5ம்தேதி முதல் ஒவ்வொரு பிரிவாகச செயல்பட்டு வந்தது. சமாதானமுறையில் கல்லூரி நடைபெற்றது.

இந்நிலையில் 1972ம் வருடம் பிப்ரவரி 27ம் தேதி கல்லூரியில் "பவுண்டர்ஸ் டே" நடைபெற்றது. அவ் விழாவிற்கு மாணவர்களை அழைக்கவில்லை. இந்நிகழ்ச்சி மாணவர்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தை அளித்தது. உடனே விழா நடந்த இடத்திற்கு வெளியே நின்று மாணவர்கள் தங்கள் எதிர்ப்பைக் காட்டும் முறையில் எதிர்ப்புக்கோஷங்கள் போட்டுவிட்டு கலைந்து சென்றனர். அந்த மாணவர்களை கல்லூரி நிர்வாகி நாகராஜனின் அடியாட்கள் மாணவர்களை அடித்து விரட்டினர். பலருக்குப் படுகாயங்களுடன் முள் வேலிகளிலும், சுவர்களையும் தாண்டிக் குதித்து, தப்பித்துக்கொண்டனர். இந்த நேரத்தில் இரவு பத்து மணிக்கு கல்லூரி முதல்வர், பேராசிரியர்கள், விரிவுரையாளர்கள், நிர்வாகி நாகராஜன்.நாகராஜனின் அடியாட்கள் ஆகியோர் கம்புகளுடன் எதிலும் சம்பந்தப்படாத தங்கம்மாள் கல்லூரி விடுதியில் படித்துக்கொண்டும் தூங்கிக்கொண்டும் இருந்த மாணவர்களை கதவை உடைத்து அடித்து படுகாயப்படுத்தினர். ஒரு மாணவர் இரண்டாவது மாடியிலிருந்து கீழே குதித்து, படுகாயங்களுடன் ஓடிவிட்டார், குண்டர்கள் மாணவர்களுடைய கைக்கடியாரம் பேனு, புத்தகம், துணிகள் ஆகியவற்றையும் பறித்துக் கொண்டு அடித்துத் துரத்தினர். ஒரு மாணவர் வேட்டி இல்லாமல் ஓடிப்போய் ஒரு காட்டுக்குள் மற்றவருடைய 8 முழவேட்டியை கிழித்துகட்டிக் கொண்டு அருகிலிருந்த கிராமமான நரசிங்கபுரத்திற்கு அனைவரும் சென்றுவிட்டனர். அவர்களுடைய பொருட்கள் சூறையாடப்பட்டன.

தப்பித்துச் சென்று கிராமத்திலிருந்த மாணவர்களை நாகராஜனின் அடியாட்கள் மீண்டும் ஆயுதங்களுடன் கிராமத்திற்குள் பிரவேசித்து அடித்தனர். இவ்விஷயமறிந்த கிராமத் தலைவர் ஓடிவந்து திரண்டு அடியாட்களை எச்சரித்தவுடன் அவர்கள் திரும்பிவிட்டனர். விவசாயச் சங்கத்தையும் கம்யூனிஸ்ட் கட்சியையும் சேர்ந்த தோழர்களின் பேருதவியால் மாணவர்கள் காப்பாற்றப்பட்டனர்.

மறுநாள் 28ம் தேதி காலை நரசிங்கபுரத்திலிருந்து சுமார் 500 மாணவர்கள் ஊர்வலத்துடன் திருப்பத்தூர் நகர வீதியில் சென்றனர் இதன் பின் சுமார் காலை 10 மணியளவில் மாணவர்கள் தாக்கப்பட்ட சம்பவத்தை எதிர்த்து உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் சுமார் 700 பேர் பள்ளிக்குச் செல்லாமல் கண்டன ஊர்வலம் நடத்தி நகர்முழுவதும் "நாகராஜனின் அட்டூழியம் ஒழிக!" "அடிக்காதே அடிக்காதே மாணவர்களை அடிக்காதே" "நாகராஜனின் அடியாட்கள் ஒழிக!" "திருப்பத்தூர் யஹியா நாகராஜா ஒழிக!" என கோஷங்களுடன் ஊர்வலம் வந்தனர்.

இந்நிலையில் அமைச்சர் திரு. மாதவன் அதே ஊரில் பஞ்சாயத்து யூனியன் மருத்துவமனை, காவலர் குடியிருப்பு காலனி போன்ற திறப்பு விழாவிற்கு வந்திருந்தார். திருப்பத்தூர் நகரமே போலீஸ்மயமாக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் நிர்வாகி நாகராஜன் கொடுமைக்கு, கல்லூரி மாணவர்கள் உயிருக்கும், உடமைக்கும் பாதுகாப்பின்றி அவல நிலையில் இருக்கின்றனர். இந்நிகழ்ச்சியால் மாணவர்களும், பொதுமக்களும் பீதியுடனும் அச்சத்துடனும் இருக்கின்றனர்.

---

## கோடை விடுமுறையில் சோஷலிசப் பிரச்சாரம்

### மாணவர் பெருமன்றம் முடிவு

அனைத்திந்திய இளைஞர் மாணவர் மன்றங்களின் மத்தியக் குழுக்கள் முறையே பிப்ரவரி 26, 27 தேதிகளில் திருச்சியில் கூடின. மாணவர் சமுதாயத்தின் பல்வேறு பிரச்சினைகளை மாணவர் மன்ற மத்தியக் குழு விவாதித்தது. விவாதத்திற்குப் பிறகு கீழ்க்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டன.

மண்டபத்தில் மாணவர் மீதும், தோழர் மங்களசாமி மீதும் தி. மு. க.வினர் நடத்திய வெறியாட்டத்தையும், தொடர்ந்து அவர்கள் தமிழகத்தின் பல்வேறு இடங்களில் வெளிப்படுத்தும் இதே வன்முறைப் போக்கை கண்டித்தும் இளைஞர் மன்றம் நடத்தும் கூட்டங்களில் மாணவர் மன்றம் பொறுப்பெடுத்துக் கொள்ளும்.

இன்னும் சில மாதங்களில் இளைஞர் மன்றம் நடத்தவிருக்கும் வேலையின்மை எதிர்ப்பு மாநாடுகளில் முழுப் பங்கேற்பது. சென்னை, கோவை, நெல்லை, திண்டிவனம், திருச்சி, மதுரை, தர்மபுரி ஆகிய மாவட்டங்களில் இம்மாநாடுகள் நடத்தப்பெறும்.

வீடில்லாத ஏழை மக்களுக்கு வீடுகள் கட்டித்தர கேரள மாநில அரசு வீடு கட்டும் பொருள்களைத் தருகிறது. வீடுகளைக் கட்டித்தரும் பொறுப்பை இளைஞர் மாணவர் மன்றங்களின் கேரள மாநிலக் குழுக்கள் ஏற்றுள்ளன. பிற மாநில இருமன்றத் தோழர்களும் இப்பணியில் கலந்துகொள்ள அழைப்பு விடப்பட்டுள்ளது. அதை ஏற்று மன்ற மத்தியக்குழு இப்பணியில் பங்கு ஏற்க முடிவெடுத்துள்ளது. பிப்ரவரி 25ம் நாள் நடந்த பட்டதாரி ஆசிரியர்களின் அறப்போராட்ட வெற்றியை மத்தியக்குழு பாராட்டுகிறது. தொடர்ந்து நடக்கும் பட்டதாரி ஆசிரியர் போராட்டத்திற்கு மன்றம் முழு ஆதரவையும் ஒத்துழைப்பையும் தர தயாராக உள்ளது.

ஆரம்பப்பள்ளி ஆசிரியர்களின் கோரிக்கைகளை முழு அக்கறையுடன் ஆராய்ந்தது. அவர்களுடைய கோரிக்கைகள் உடனடியாகக் கவனித்து தீர்க்கப்பட வேண்டும், என அரசை இக்குழு வற்புறுத்துகிறது. அவர்களுடைய எழுச்சி நாள் இயக்கத்திற்கு முழு ஆதரவையும் குழு தருகிறது.

தொடர்ந்து போராடிவரும் பஞ்சாலைத் தொழிலாளர்களின் போராட்டத்தை இக்குழு ஆதரிக்கிறது. மாநில அளவில் திரண்டு போராடத்தயாராகும் அவர்களுடைய வர்க்க ஒற்றுமையை இக்குழு பாராட்டுகிறது.

மாணவர்களுக்குப் பல்கலைக்கழக செனட்டில் இடம் வேண்டும் என்று கோரும் பல்கலைக்கழக சட்டத்திருத்த தனிநபர் மசோதாவை தோழர் சுப்பு, எம்.எல்.ஏ. இந்த சட்டமன்ற தொடரில் கொண்டுவருகிருர். அதற்கான மாணவர் ஆதரவைக் கல்வி அமைச்சருக்குத் தெரியப்படுத்த நடவடிக்கை மேற்கொள்வதென குழு முடிவு செய்துள்ளது.

தமிழ்நாட்டின் கிராமப் புறங்களில் மண்டிக்கிடக்கும் இருளைப்போக்கும் பணியில் இளைஞர் மாணவர் மன்றங்கள் ஈடுபடவிருக்கின்றன. கோடையில் நாடு முழுவதும் சுற்றிட சிறு சிறு குழுக்கள் அமைக்கப்படும். இச் சிறு குழுக்கள் 7 நாட்களுக்கு சோஷலிசப் பிரச்சாரம் செய்யும். இந்த சோஷலிசப் பிரச்சாரப் பணி மே மாத இறுதியில் சிறப்பாக நடைபெறும். கலை நிகழ்ச்சிகளும் இப் பிரச்சாரத்தினூடே நடத்தப்பெறும்.

# அமெரிக்க ஜனாதிபதியின் பீகிங் பயணம்

"எம்கேயார்"

உலக ஏகாதிபத்தியத்தின் தலைமையை ஏற்றுள்ள அமெரிக்க நாட்டின் ஜனாதிபதி நிக்சன், புரட்சியின் "மொத்தக் குத்தகைதாரர்களாக" உள்ள சீனாவுக்குச் சென்றுவிட்டுத் தனது தாயகம் திரும்பிவிட்டார். சீனப் பிரதம மந்திரி சூ-என்-லாயின் மொழியில் சொன்னால், "அமெரிக்க-சீன உறவுகளின் வரலாற்றில் முன் எப்பொழுதும் கண்டிராத" நிகழ்ச்சி அது.

சீறிக்கொண்டிருந்த இரண்டு பரம வைரிகள், சேர்ந்து அமர்ந்து, விருந்துண்டு, சமாதானமாக இனி வாழ்வோம் என்று சங்கல்பமும் எடுத்துக் கொண்டார்கள் என்றால், அதை உலகம் குறிப்பாகக் கவனிப்பதில் வியப்பேதும் இல்லை. இந்தக் கூடிக் குலாவலினால் ஏற்பட்டுள்ள விளைவுகள் என்ன என்பதைக் காணுவதற்கு முன்னால், இந்தப் பரம எதிரிகள் இருவரும் சந்திப்பதற்கான அடிப்படை என்ன என்பதை ஆராய்வோம்.

முதலாளித்வ வாழ்க்கை முறையை ஏற்று, ஏகாதிபத்தியமாக வளர்ந்து, உலக ஆதிக்கம் பெறச் செயலாற்றிக் கொண்டிருக்கும் நாடு அமெரிக்கா. உலகத்தில் உள்ள உழைக்கும் மக்களின் முதலாவது எதிரி அது என்பதில் யாருக்கும் ஐயம் இல்லை. கம்யூனிசத்திடமிருந்து உலகத்தைக் காப்பாற்றுவதாகக் கூறிப் பல்வேறு நாடுகளின் விவகாரங்களிலும் தலையிட்டு, போர்ப்படுகுழியில் உலக மக்களை இன்றும் தள்ளிக் கொண்டுள்ளது அது.

சீன மக்கள் குடியரசு, இதற்கு நேர் எதிரிடையான லட்சியங்களை வாயளவில் முழக்கிக் கொண்டுள்ளது. சோஷலிஸப் புரட்சியை நடத்தி முடித்த போதிலும், தன்னுடைய ஆணவத்தால், உலக சோஷலிச முகாமிலிருந்து விலகித் தனிமைப்பட்டு நிற்கிறது. அமெரிக்க ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதில், உலக சோஷலிச முகாமை விடவும் அதிதீவிரமாக இருப்பது நானே என்று அடிக்கடி வாய்ப்பறை கொட்டி மகிழ்வது. அமெரிக்காவின் அத்துமீறல்களுக்கு எதிராக ஆயிரக்கணக்கில் "கண்டனங்களையும் எச்சரிக்கைகளையும்" காகிதங்களில் மட்டுமே அனுப்பிக்கொண்டுள்ளது.

இப்படி இருவேறு துருவங்களில் நிற்கும் இந்த இரு நாடுகளுக்கும் சோவியத் எதிர்ப்பு என்ற ஒரே ஒரு பொது அடிப்படைதான் உண்டு.

உலக ஆதிக்கம் பெறும் தனது முயற்சிக்குச் சோவியத் யூனியன்தடையாக இருப்பதை அமெரிக்க ஏகாதிபத்தியம் காண்கிறது. அதைப்போலவே, மார்க்சீய-லெனினியப் பாதையிலிருந்து வழுவி, பெரிய நாடு என்ற அகங்காரத்துடன், உலக சோஷலிச முகாமையேதனக்கு அடிமைப்படுத்த எண்ணிக் கொண்டிருக்கும் சீனாவும், தனது நோக்கங்கள் நிறைவேற இயலாதபடி குறுக்கே நிற்பது சோவியத் யூனியன்தான்என்று கருதுகிறது.

எதிரிக்கு எதிரி நண்பன் என்ற வகையில், அமெரிக்காவும் சீனாவும் இன்று சோவியத் மறந்துவிட்டு ஒன்றுசேர வைத்துள்ளது.

தேசிய விடுதலைப் போராட்டங்களில் கூட, மக்கள் பக்கம் நிற்காமல், அடக்குமுறையாளர்கள், காலனியாதிக்கவாதிகள் பக்கமே சீனா நிற்கிறது என்பதைப் புகழ்மிக்க பங்களாதேஷ் போராட்டம் காட்டிவிட்டது. அந்தப் பிரச்சினையில் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் நிலைமை என்ன என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும்.

பங்களாதேஷ் பிரச்சினையில் மட்டுமின்றி, அண்மையில் நடைபெற்ற உலக நிகழ்ச்சிகள் பலவற்றிலும் அமெரிக்க ஏகாதிபத்தியமும் சீனாவும் ஒத்துப் போவதைக் காணமுடியும். இப்படி ஒத்துப்போவதும் தற்செயலாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அல்ல. அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்கும் சீனாவின் மாவோயிசத் தலைமைக்கும் இடையில், முறையான ரகசியத் தொடர்புகள் வெகுகாலமாகவே இருந்து வந்துள்ளன.

இந்த ரகசியத் தொடர்புகளின் பலனாகத்தான்அமெரிக்க அதிபர் நிக்சன் பீகிங் ஆளும் வட்டாரங்களின் வரவேற்பைப் பெற்றுள்ளார். இப்பொழுது, அமெரிக்க சீன உறவுகள் பகிரங்க நிலைக்கு வந்துள்ளன. மாணவர்கள், தொழில் நுணுக்க வல்லுநர்கள், பத்திரிகையாளர்கள் முதலியோரைப் பரஸ்பரம் பரிமாறிக்கொள்ள இரண்டு நாடுகளும் முன்வந்துள்ளன. ஏதாவது ஒரு வகையில் ராஜதந்திரத் தொடர்புகள் ஏற்படலாம்.

உலக அமைதி, சமாதான சகவாழ்வு முதலிய உன்னத லட்சியங்களை கேலியும் கிண்டலும் செய்து வந்த சீனாவின் மாவோயிசக் கும்பல், இப்பொழுது உலக அமைதி பற்றியும், சமாதான சகவாழ்வு பற்றியும் அமெரிக்காவுடன் சேர்ந்து கூட்டறிக்கை விடுவது, முற்போக்கான அம்சம்போல் ஏற்படலாம்.

## வெற்றி யாருக்கு?

எதிர்ப்பு என்ற பொது அடிப்படையில் கூடிக் குலாவுகின்றன. வேறு எந்தப் பொதுத் தன்மையும் இந்த இரு நாடுகளிடையில் கிடையாது என்பதை உலக வரலாறு காட்டுகிறது.

சில ஆண்டுகளுக்கு முன்பு, சீனாவின் பார்வையில வெறும் காகிதப் புலியாக இருந்தது அமெரிக்க ஏகாதிபத்தியம். ஆனால் இன்று, கட்டித் தழுவிக்கொள்ள வேண்டிய பெரிய நாடாக அது மாறிவிட்டது போலும். அதேபோல, அணுகுண்டையாவது பயன்படுத்தி அழித்து ஒழிக்கப்படவேண்டிய நாடாக, அமெரிக்காவுக்குப் பட்டது சீனா. இன்று அணைத்துச் செல்லவேண்டிய சக்தியாக அது அமெரிக்காவுக்குப் படுகிறது.

இரண்டு பெரிய வல்லரசுகள் இப்படி இணைந்து செல்வதற்கான காரணம் என்ன? உலக அரங்கில், அரசியல், பொருளாதாரம் முதலிய அனைத்துத் துறைகளிலும் சோஷலிச நாடுகளின் செல்வாக்கு வளர்ந்து பரவி வருகிறது. ஏகாதிபத்தியத்தின் நெருக்குதல்களுக்குச் சரியான பதிலடி கொடுப்பதற்கான வல்லமையைச் சிறிய நாடுகளுக்கும், வளர்ந்து வரும் நாடுகளுக்கும் சோஷலிச முகாம், குறிப்பாகச் சோவியத் யூனியன் தந்துதவுகிறது. ஏகாதிபத்தியத்தின் நிலை அம்பலமாகி நிற்பதைப் போலவே, சோஷலிசப் போர்வையில் வரும் சீனாவின் அதிரடிப் போக்குகளும் உலக நாடுகளிடையில் எடுபடவில்லை.

இந்த நிலையில், சோவியத் யூனியன் மீது கொண்டுள்ள வெறுப்பு, இந்த இரண்டு "எதிரிகளும்" தங்களுடைய பரஸ்பரப் பகைமையைக் கூட

ஆனால், அனுபவத்தைக் கொண்டு பார்க்கும் பொழுது தான், இதன் பின்னால் உள்ள சூது தெளிவாகும். இந்திய நாட்டுடன் உறவாடியபொழுது சீனம் ஏற்றுக் கொண்ட "பஞ்சசீலக் கோட்பாடுகளும்" அதன் பின் அவைகளுக்கு ஏற்பட்ட கதியும் நம் நினைவை விட்டு இன்னும் நீங்கிவிடவில்லை.

சைவமாக மாறிவிட்ட புலியைப் போல, அடுத்த நாடுகளின் விவகாரத்தில் தலையிடப் போவதில்லை என்று அமெரிக்கா உறுதி கூறியுள்ளதாகச் சீன-அமெரிக்கக் கூட்டறிக்கை கூறுகிறது. ஆனால் நடைமுறை என்ன?

வங்காளதேசத்தில் வாங்கிய உதையை மறவாத,அமெரிக்காவும் சீனாவும் காஷ்மீர் பிரச்சினையை மேலும் கிளப்பிவிடத் தொடங்கியுள்ளன. அன்னியர் விவகாரங்களில் தலையிடுவதில்லை என்று கூறிய இரண்டு நாடுகளும், அடுத்த வரியிலேயே இப்படிக் குறிப்பிட்டு இந்தியாவைப் பழிதீர்க்க முயற்சி செய்துள்ளன. இந்திய நாட்டின் மீது அவைகளுக்கு உள்ள வெறுப்பையும் துவேஷத்தையும் கூட்டறிக்கை தெளிவாகக் காட்டுகிறது.

தென்கிழக்கு ஆசியாவில் உள்ள நாடுகள் படும் துன்ப

(14ம் பக்கம் பார்க்க)

---

# கிராமங்கள்தோறும் கொள்கை முழக்கம்!

## கம்யூனிஸ்ட் லட்சிய விளக்கம்!

### மார்ச் மூன்றும் வாரம் முதல் ஏப்ரல் முதல் வாரம் வரை

## கிராம பிரச்சாரப் பேரியக்கம்

- ★ தேசிய-சர்வதேசிய விமர்சனங்கள்,
- ★ தேசத்தில் முகிழ்த்து வரும் முற்போக்கு மாறுதல்கள்,
- ★ முட்டுக்கட்டையிட நினைக்கும் சுதந்திர ஜனசங்-சிண்டிகேட் போன்ற பிற்போக்காளர்களின் சாகஸங்கள்,
- ★ அந்தச் சாகஸங்களுக்குத் துணைபுரியும் மார்க்சிஸ்ட்-சோஷலிஸ்ட் கட்சிகளின் சீர்குலைவுகள்,
- ★ தொழிலாளர் விரோத-முதலாளிகள் ஆதரவுப் போக்கால் தமிழக அரசின் மீது தொழிலாளர்கள், மாணவர்கள், மத்தியதர வர்க்கத்தினர் போன்ற மக்கள் பகுதியில் கழக அரசின் மீது ஏற்பட்டுவரும் அதிருப்தி,
- ★ கழக அரசின்மீது ஏற்பட்டு வரும் அதிருப்தியை சாதகமாக்கிக்கொள்ள மார்க்சிஸ்ட் துணையுடன் சிண்டிகேட் நடத்தும் முயற்சிகள்,

—இன்னபிற செய்திகளை கிராமங்கள்தோறும் கொண்டு சென்று, கிராம மக்களிடம் விளக்கிடவும்,

கிராமங்களிலே வாழும் விவசாயத் தொழிலாளர்கள், ஹரிஜனங்கள், நடுத்தர சிறிய விவசாயிகள் போன்ற மக்கள் பகுதியிடம் கம்யூனிஸ்ட் கட்சி, விவசாயிகள் சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் ஆகிய அமைப்புக்களின் கொள்கைகளை, முழக்கங்களை, திட்டங்களை விளக்கிடவும்—

## கிராமப் பிரச்சாரப் பேரியக்கம்!

நியாயக் கூலியை விவசாயத் தொழிலாளர் அனைவரும் பெற்றிட—

நிலவெளியேற்றக் கொடுமைகளைத் தடுத்து உழவனைக் காத்திட—

பிப்ரவரி 18, 19, 20 ஆகிய நாட்களில் மன்னார்குடியில் கூடிய மாநில நிர்வாகக் குழுவின் அறைகூவல்தான்—

## கிராமப் பிரச்சாரப் பேரியக்கம்!

மாவட்டம்தோறும்,வட்ட, வட்டார வாரியாக இந்த 'கிராமப் பிரச்சாரப் பேரியக்க'த்திற்கு மாவட்டக் குழுக்கள் திட்டமிட்டு செயல் வடிவம் காணவேண்டும்.

நடைப் பயணம் - சைக்கிள் பயணம்—அல்லது இரண்டு முறைகளையும் கொண்ட கம்யூனிஸ்ட் தோழர்களின் குழுக்கள் கிராமந்தோறும் கொள்கை முழக்கமிடும்.

கொள்கை முழக்கப் பயணம் தொடங்கும் முன்பு ஓர் ஊரில் பொதுக்கூட்டம், முடிக்கும்போது பொதுக்கூட்டம்.இடையிலே வாய்ப்புக் கிடைக்கும் இடத்திலே பொதுக்கூட்டம். கூட்டங்கள் இல்லாத கிராமம் எங்கும் ஒலிபெருக்கிக் குழாய் (மெகப்போன்)கள் மூலம் கொள்கை விளக்கம்.

இதுதான்—கொள்கை முழக்கப் பயணக் குழுக்களின் பணி!

கிராமப் பிரச்சாரப் பேரியக்கத்தின் செயல் திட்டமாகும்!

- ● ஏப்ரல் 8, 9 நாட்களில் நெல்லையிலே கூடும் தமிழ்நாடு விவசாயிகள் சங்க மாநாட்டின் சிறப்பையும்.
- ● ஏப்ரல் கடைசி வாரத்தில் மன்னார்குடியில் நடைபெறும் அகில இந்திய விவசாயத் தொழிலாளர் மாநாட்டின் முக்கியத்துவத்தையும்—

**கிராமங்கள்தோறும் கொள்கை முழக்கப் பயணக் குழுவினர் விளக்கிடுவர்!**

ஆம்—பதினைந்து நாட்களில் தமிழகத்தின் பட்டிதொட்டியெங்கும்—

நமது கொடி பறக்கும்!

நமது கொள்கை முழக்கம் கேட்கும்!

போட்டிக் கட்சியினரே நம்மைக் கண்டு காப்பி அடிக்கும் வகையில் தமிழகத்தின் நகரங்கள் தோறும் பிரச்சாரப் பேரியக்கத்தை வெற்றிகரமாக நடத்திமுடித்து, 300-க்கு மேல் பொதுக் கூட்டங்கள் நடத்தி வரலாறு படைத்த கம்யூனிஸ்ட் கடமை வீரர்களே...

திட்டமிடுங்கள்! புறப்படுங்கள்!

கிராமங்கள்தோறும் நமது நல்லரும் கொள்கையை முழக்கமிடுங்கள்.

**- தமிழ் மாநில நிர்வாகக் குழு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி.**

# விவசாயிகள் போராட்டத்தில் போலீஸ் அதிகாரிகளின் தலையீட்டுக்குக் கண்டனம்

## மின்சாரக் கட்டண உயர்வுக்கும் கண்டனம்

### நெல்லை மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சி பொதுக்குழு கூட்ட தீர்மானங்கள்

நெல்லை மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்குழுக் கூட்டம் பி. முத்துமாணிக்கம் தலைமையில் மாவட்ட அலுவலகத்தில் நடைபெற்றது.

மாநில கட்சி உதவிச் செயலாளர் ப. மாணிக்கம், நிர்வாகக் குழு உறுப்பினர்கள் ஆர். நல்லகண்ணு, எஸ். ஏ. முருகானந்தம் ஆகியவர்கள் கலந்து கொண்டார்கள்.

பங்களாதேஷ் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு வெற்றி தடித்தந்த இந்திய ராணுவத்துக்கும் முக்திவாகினி படையினருக்கும் வங்க மக்களுக்கும் அக்கூட்டம் தன் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொண்டது. போரில் உயிர் நீத்த வீரர்களுக்கு மரியாதையையும் அனுதாபத்தையும் அக்கூட்டம் தெரிவித்துக்கொள்கிறது.

செங்கற்பட்டு மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சி தலைவர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியின் மறைவுக்கு அஞ்சலி செலுத்தியது.

நாட்டின் அரசியல் நிலைமை பற்றிய கட்சியின் தீர்மானங்களை விளக்கி ப. மாணிக்கம் விளக்க உரையாற்றினர்.

கடந்த ஐந்து மாத கால வேலை அறிக்கையை விளக்கி மாவட்ட கட்சி செயலாளர் வி. எஸ். காந்தி பேசினர்.

விவசாய அரங்க வேலைகளை மாவட்ட கன்வீனர் பி. முத்துமாணிக்கம் விளக்கிப் பேசினர்.

மின்சாரக் கட்டண உயர்வைக் கண்டித்து மின்சாரம் உபயோகிக்கும் விவசாயிகளிடம் கார்டுகளில் கையொப்பம் வாங்கி மாநில முதலமைச்சர் அவர்களுக்கு அனுப்ப தீர்மானிக்கப்பட்டது.

மாநில விவசாய சங்க 17 வது மாநாட்டை ஏப்ரல் முதல் வாரத்தில் நெல்லை நகரில் நடத்துவது என முடிவு செய்யப்பட்டது.

மாவட்ட முழுவதும் 1000 தொண்டர்களுக்கு பயிற்சியளிக்க முடிவு செய்யப்பட்டது.

மாவட்ட கட்சியின் அரசியல் கல்வி உப குழுவுக்கு பேராசிரியர் என். வானமாமலையை கன்வீனராகக் கொண்ட ஐவர் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

மாவட்டக் குழுவுக்கு உறுப்பினர்களாக பயில்வான் அருணாசலம், வி. வி. ரெங்கசாமி இருவரும் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள்.

மாவட்ட நகராட்சி தொழிலாளர் சங்கம் அமைக்க தீர்மானிக்கப்பட்டது.

#### தீர்மானங்கள்

மின்சார கட்டண உயர்வை கைவிட்டு, முன்னைய கட்டணமான யூனிட்டுக்கு 9 காசு விவசாயிகளிடம் வசூலிக்க வேண்டும்.

மக்களின் அன்றாட உபயோகப் பொருள்கள் விஷம் போல் விலைவாசி ஏறிவிட்டது. மேலும் ஏறி வருகிறது. மக்கள் நல்வாழ்வில் அக்கறை இருப்பதாக கூறும் தமிழக அரசு விலைவாசி உயர்வை உடனடியாக கட்டுப்படுத்த நடவடிக்கை எடுக்கவேண்டும்.

விவசாயிகளின் நியாயமான போராட்டங்களில் நிலச்சுவான்தாரர்களுக்கு சாதகமாக ஒருதலைப்பட்சமாக விவசாயிகளுக்கு விரோதமாக தர்பார் நடத்தும் ஆலங்குளம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர், ஆழ்வார் திருநகரி போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் மற்றும் பொதுநல ஊழியர்கள் கம்யூனிஸ்ட்கட்சி ஊழியர்களுக்கு தொடர்ந்து தொல்லை கொடுத்துவரும் விக்கிரமசிங்கபுரம் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் ஆகியவர்களின் நடவடிக்கைகளை வன்மையாக கண்டிக்கிறோம். இம் மூவரின் மீதும் தமிழ்நாடு சர்க்கார் விசாரணை நடத்தி நடவடிக்கை எடுக்கவேண்டுமென இக் கூட்டம் வற்புறுத்துகிறது.

சிம்சன், ஆவடி தொழிலாளர்களின் நியாயமான போராட்டத்தில் தமிழக அரசு கையாண்ட தொழிலாளர் விரோத போக்கையும் அடக்குமுறை தர்பாரையும் இக் கூட்டம் கண்டிக்கிறது. தொழிலாளி வர்க்கத்தின் நலஉரிமைகளை பாதுகாக்க தொடர்ந்து போராடுவது என முடிவு செய்யப்பட்டது.

மக்களின் பிரச்சினைகளுக்காக சிவகிரியில் உண்ணாவிரத இயக்கம் நடந்தபோது அரசாங்கம் கொடுத்த வாக்குறுதிகள் முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. ராஜபாளையம் சிவகிரி டவுன் பஸ் விடவேண்டும், சிவகிரி மருத்துவமனையைஅரசு மருத்துவ மனைக்கு உடனடியாக டாக்டர் நியமிக்க வேண்டும். சிவகிரியில் உள்ள தொழுநோய் ஆஸ்பத்திரியை மாற்றக் கூடாது இந்த நான்கு கோரிக்கைகளையும் அரசு உடனே நிறைவேற்றி தரவேண்டுமென அக்கூட்டம் கேட்டுக் கொண்டது.



### தஞ்சை மாவட்டத்தில்:

## குவிகிறது கட்சி நிதி!

#### கோட்டூர்

18—2—72ல் கோட்டூர் தெற்கு வீதியில் கோட்டூர் வட்டார விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் எஸ். எஸ். திருஞானசம்மந்தம் தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில் 24 கிராமங்களிலிருந்து ஆண்களும், பெண்களும் கிராமிய நடனங்களுடன், கிராமிய வாத்தியங்கள் முழங்க அலங்கரிக்கப்பட்ட 63 வண்டிகளில் ஏற்றிக் கொண்டுவந்து கொடுத்த 736 கலம் நெல்லையும், 1688 ரூபாய் பண முடிப்பையும் தமிழ் மாநில செயலாளர் தோழர் எம். கல்யாணசுந்தரம், எம். பி. அவர்களிடம் கோட்டூர் வட்டார செயலாளர் தோழர் கே. சுப்ரமணியம் வழங்கினர். நிதியைப் பெற்றுக் கொண்டு தோழர் எம். கல்யாணசுந்தரம், எம். பி. பேசியபோது நிதி வழங்கிய விவசாயிகளுக்கும், விவசாய தொழிலாளர்களுக்கும் தனது நன்றியையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொண்டார். கூட்டத்தில் தோழர் ஏ. கே. சுப்பையா, எம். எல். ஏ, மாவட்ட துணைச்செயலாளர் தோழர் பி. ராமலிங்கம், வட்டார செயற்குழு உறுப்பினர் தோழர் ஆர். வி. பாலகிருஷ்ணன் ஆகியோரும் பேசினர்.

#### களப்பால்

19—2—72ல் களப்பால் கிராமத்தில் கோட்டூர் ஊராட்சி ஒன்றிய பெருந்தலைவர் தோழர் கே. முருகையன் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில் தமிழக சட்டமன்ற உறுப்பினர் தோழர் கே. டி. கே. தங்கமணியிடம் 10 கிராமங்களிலிருந்து கொண்டுவந்து கொடுத்த 366 கலம் நெல்லும், 539 ரூபாய் பணமுடிப்பும் நிதியாக வழங்கப்பட்டது.

#### பெருகவாழ்ந்தான்

20—2—72ல் பெருகவாழ்ந்தான் கிராமத்தில் தோழர் எஸ். பிச்சைக்கண்ணு அவர்கள் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தமிழ் மாநில விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் எம். ஆதிமூலம் அவர்களிடம் 11 கிராமங்களிலிருந்து கொண்டுவந்து கொடுத்த 261 கலம் நெல்லையும், 578 ரூபாய் பண முடிப்பையும் கோட்டூர் வட்டாரத் துணைச்செயலாளர் தோழர் ஆர். எம். ராமசாமி வழங்கினர்.

#### தலைஞாயிறு

தலைஞாயிறு வட்டாரத்தின் சார்பில் முதல் தவணையாக 20—2—72 மாலை நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் எஸ். கோவிந்தசாமி தலைமையில் மாநிலத் துணைச் செயலாளர் தோழர் கே. டி. ராஜுவிடம் 306 கலம் நெல்லும், ரூ. 105-ம் அளிக்கப்பட்டது. தோழர்கள் 55 அலங்கார வண்டிகளில் நிதி நெல்லை கிராமங்களிலிருந்து கொண்டுவந்தார்கள். தோழர்கள் பி. கணேசன், பட்டு கிருஷ்ணன், கே. ராமச்சந்திரன், பி. ஏ. ஜெகநாதன், எம். பி. கண்ணுசாமி ஆகியோர் பேசினர்.

#### பாபநாசம்

பாபநாசம் வட்டத்தின் சார்பில் 18-2-72 அன்று மாலை தோழர் பி. ஆர். சீனிவாசன தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் எஸ். ஏ. முருகானந்தம் எம். பி. அவர்களிடம் ரூ 513 நிதியளிக்கப்பட்டது தோழர்கள் ஏ. வீரப்பன். வீரய்யன், பைரன், கே. எஸ். டி. அய்யா ஆகியோர் பேசினர்.

22—2—72 அன்று அம்மாபேட்டையில் தோழர் உத்தான் தலைமையில் தோழர் மு. அம்பிகாபதியிடம் முதல் தவணையாக ரூ 126 நிதியளிக்கப்பட்டது.

#### சீர்காழி

சீர்காழியில் தோழர் கே. சண்முகம் தலைமையில் 20-2-72 மாலை தோழர் தா. பாண்டியனிடம் முதல் தவணையாக கட்சிநிதி ரூபாய் 981ம், 281 கலம் நெல்லும் அளிக்கப்பட்டது. தோழர்கள் எஸ். வடிவேலு எம். எல். ஏ, க. மாணிக்கம், கே. எஸ். அண்ணங்கார், டி. சிவநேசன் ஆகியோர் பேசினர்.

# நெல்லை மாவட்ட விவசாயிகள் சங்கம்

22-2-72ல் நெல்லைமாவட்ட விவசாய சங்க நிர்வாகக்குழுக் கூட்டம் தோழர் கந்தப்பிள்ளை தலைமையில் நடந்தது.

மாவட்டத் துணைச் செயலாளர் தோழர் கே. செல்லையா தாலுகா மகாநாடுகள் நடத்துவது பற்றியும் மாநில மகாநாட்டின் தயாரிப்பு வேலைகள் பற்றியும் விரிவுரை தந்தார்.

சாகுபடியாளர்களை நிலவெளியேற்றம் செய்ய நிலச்சுவான்தார்கள் நீதிமன்றங்களையும் அடியாட்களையும் பயன்படுத்துவது பற்றியும் ஸ்தலத்திலுள்ள ஒரு சில போலீஸ்காரர்களையும் நிலச்சுவான்தார்கள் பயன்படுத்துவதையும் பற்றி விவாதித்து இறுதியாக கீழ்க்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டன.

மின் கட்டண உயர்வைக் கைவிடக்கோரியும் நிலவெளியேற்றம் செய்வதை தடுப்பதற்கு மாநில அரசு அவசரச் சட்டம் கொண்டுவர வேண்டுமென்றும் மாவட்டத்தில் 9 மையங்களில் ஆர்ப்பாட்டமும் பொதுக்கூட்டமும் நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

கீழ்க்கண்ட சென்டர்களில் கலந்து கொள்ளும் பேச்சாளர்கள் :

கோவில்பட்டியில் வி. கணபதி, கடயத்தில் பி. மைதீன், திருச்செந்தூரில் எஸ். ஏ. முருகானந்தம் எம்பி, புளியங்குடியில் கே. செல்லையா, வள்ளியூரில் பி. காந்தாராஜ், நெல்லையில் வி. எஸ். காந்தி, பி. முத்துமாணிக்கம், தென்காசியில் பீர் இஸ்மாயில், செங்கோட்டையில் என். எம். கிருஷ்ணன். ஏரலில் ஏ. கிருஷ்ணன்.

#### தாலுகா மாநாடுகள்

மார்ச்மாதத்திற்குள் தாலுகா மாநாடுகளை கீழ்க்கண்ட முறையில் நடத்திட முடிவு செய்யப்பட்டது.

| | | |
|---|---|---|
| மார்ச் | 7 | நாங்குநேரி |
| ,, | 10 | ஸ்ரீவைகுண்டம் |
| ,, | 15 | சங்கரன்கோவில் |
| ,, | 19 | திருச்செந்தூர் |
| ,, | 20 | அம்பை |
| ,, | 21 | கோவில்பட்டி |
| ,, | 22 | விளாத்திகுளம் |

ஏப்ரல் 7 அன்று மாவட்ட பிரதிநிதிகள் மாநாட்டை நடத்துவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

#### வரவேற்புக்குழு

65 பேர்களைக் கொண்ட மாநில மகாநாட்டு வரவேற்புக் குழு தோழர் எஸ். அ கிரிசாமி எம்.எல்.ஏ. தலைமையில் அமைக்கப்பட்டது.

தோழர்கள் எஸ். ஏ. முருகானந்தம், எம்.பி., என். சண்முகம், எம் நடராஜன். பி.கர்தப் பிள்ளை, வி. பி. நாயகம், ராமகிருஷ்ணன் ஆகியோர் உப தலைவர்களாகவும் பி. முத்துமாணிக்கம் செயலாளராகவும் வி. எஸ். காந்தி, வி. வி. ரெங்கசாமி, பொய்சொல்லான், ஆர். அருணாசலம், ஆகியோர் உதவி செயலாளர்களாகவும் கே. செல்லையா பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

#### தீர்மானங்கள்

நெல்லை அடிஷனல் சப் கோர்ட் ஜட்ஜ் வேளாக்தளம் இனம் விவசாயிகளுக்கு விரோதமாக இனம்தார்களுக்கு ஆதரவாக செயலாற்றும் முறையைக் கண்டித்து நெல்லை அடிஷனல் சப் கோர்ட் ஜட்ஜ் கோர்ட்டுக்கு முன்னால் ஆர்ப்பாட்டம் நடத்துவது என்றும்

விவசாயிகள் போராட்டத்தில் நிலச்சுவான்தாருக்கு சாதகமாக போலீஸ் தலையிடுவதை கண்டித்தும்,

மின் கட்டண உயர்வை கைவிடக் கோரியும், சாகுபடியாளர்களை நில வெளியேற்றம் செய்வதைத் தடுக்க அவசரச் சட்டம் கொண்டுவர வேண்டுமென்று மாநில அரசைக் கோரியும்.

தூத்துக்குடி உரத் தொழிற்சாலைக்கு ஆறுமுகமங்கலம் குளத்திலிருந்து தண்ணீர் கொண்டுசென்றால் பல ஆயிரக் கணக்கான ஏக்கர் நஞ்சை நிலங்கள் பாதிக்கும். தற்பொழுதுள்ள பயிர் பாதிக்காமலிருக்க வேண்டுமானால் தாம்பரபரணி ஆற்றில் ஏரல் பக்கமுள்ள தாம்போவி பாலம் பக்கம் அணை கட்டி தனிக்கால் வெட்டி தண்ணீர் எடுக்கவேண்டுமென்று அரசைக் கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## ஒரு என். ஜி. ஓ.வின் பார்வையில்

# சேலம் மாநாட்டுச் சாதனை ?!

தமிழ்நாடு என்.ஜி.ஓ. யூனியனின் 45-வது மாநில மாநாடு சேலம் நேரு கலையரங்கில் 19, 20 தேதிகளில் நடந்து முடிந்தது. பொதுவாக இதற்கு முந்திய மாநாடுகளைவிட இந்த மாநாட்டில் கூட்டம் அதிகம். எல்லா மாவட்டங்களிலிருந்தும் ஏராளமான என். ஜி. ஓவினர் வந்திருந்தனர். இதற்கு முக்கிய காரணம், ஞாயிறு (20-2-72) பொது விடுமுறையோடு மாநாடு நடைபெறுவதற்கும் அதில் கலந்துகொள்வதற்கும் ஏதுவாக 18, 19, 21 ஆகிய மூன்று நாட்களுக்கும் (மாநாட்டில் கலந்துகொள்ள விரும்புவோர்க்கு மட்டும்) பிரத்யேகமான விடுமுறை அளிக்கப்பட்டது. என். ஜி. ஓ. ஊழியர்கள் இதற்காக அரசுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

அத்துடன் இந்த மாநாடு ஆறு ஆண்டுகட்குப் பிறகு அதிலும் குறிப்பாக திமுக அரசு வந்த பிறகு நடைபெறும் முதலாவது மாநாடு என்பதும் ஒரு காரணமாகும். திமுக அரசு வந்தபின் ஏற்படுத்திய ஊதியக் குழுவின் சிபார்சுகள் ஊழியர்களுக்கு எதிர்பார்த்த அளவுக்கும் மிக மிகக் கீழான பலனையே தந்தது என்பதால் ஏற்பட்ட அதிருப்தி ஒருபுறம், பெரிய கெஜட் பதிவுபெற்ற அதிகாரிகளுக்கு 80, 90, 100 என்று ஊதியத்தில் உயர்வு கிடைத்திருக்கும்போது, கீழ்மட்டத்து ஊழியர்களுக்கு அவர்களது குறைந்தபட்சக் கோரிக்கையான ரூ. 30 இடைக்கால நிவாரணம் அளவுகூட ஊதியத்தில் அதிகரிப்பு ஏற்படவில்லையென்பது ஒருபுறம். அதிலும் முக்கியமாக 20-2-70 அன்று மாநில முழுவதிலும் பரவலாக என்.ஜி. ஓவினர் திரண்டு எழுந்ததன் காரணமாக உடனடியாக அறிவிக்கப்பட்ட இடைக்கால அதிகரிப்பு ரூ 10 போக, மீதி ரூ. 10 தான் இந்த ஊதியக் குழுவின் சிபார்சினால் கிடைத்தது. எனவே இதைமுற்றிலும் மாற்றியமைத்து என். ஜி. ஓவினரின் கண்ணீரை உண்மையிலேயே துடைக்க இந்த அரசு ஏதாவது செய்தாக வேண்டும் என்று ஊழியர்கள் விரும்பினர். அதன் காரணமாக அதிகமான அளவில் என். ஜி. ஓவினர் மாநாட்டில் கலந்துகொள்ள வசதி அளித்த அரசு, அதேபோன்ற பெருந்தன்மையுடன் மாநாட்டிலேயே ஏதாவது குறிப்பாக முதலமைச்சர் பயனுள்ள அறிவிப்புகள் ஏதேனும் கொடுப்பார், கொடுக்கவேண்டுமென்ற ஆவல்—இரகசியக் குறிப்பை ஒழிப்பதாகச் சொல்லி அதை பகிரங்கக் குறிப்பாக அறிவித்து அதனாலும் ஊழியர்கள் மத்தியிலே ஏற்பட்ட கடுமையான அதிருப்திக்கு ஒரு பரிகாரம் கிட்டலாம் என்ற நம்பிக்கை முதலியன மகாநாட்டிலே கலந்துகொண்டோரிடையே பரவலாக வெளிப்பட்டது.

19-2-72 அன்று காலை இந்த மாநாட்டில புதிய அம்சமாகவிருந்த கண்காட்சி ஒன்றைச் சோவியத் கான்சல் ஜெனரல் திறப்பதாக இருந்தது. ஜி.டி.ஆர். கான்சல் ஜெனரலும் வாழ்த்துப் பேசுவதாக நிகழ்ச்சி நிரலில் காணப்பட்டது. என்ன காரணத்தாலோ இவர்கள் இருவரும் வரவில்லை. முன்னாள் சட்டவை உறுப்பினர் ஒருவர் இந்தக் கண்காட்சியைத் திறந்துவைத்தார். இதன்பின் நடந்த அரசு ஊழியர் உறவுநிலை பற்றிய கருத்தரங்கில் தொடங்கி வைத்துப் பேசிய முன்னாள் சட்டமன்றத் துணைத்தலைவர் திரு ஜி. ஆர். எட்மண்ட் அரசு ஊழியர்கள் எந்தவொரு எம். பி, அல்லது எம். எல்.ஏ. வந்து அதைச் செய் இதைச் செய் என்று வற்புறுத்துவதினாலும் நேர்மையுடன் யாருக்கும் வளைந்து கொடுக்காமல் சட்ட வழிகளின்படி நடந்து கொள்ளவேண்டும் என்று உபதேசித்து விட்டுப் பின்னர் அவரே தங்களைப் போன்றவர்களைப் பொதுமக்கள் பிரச்னைகளை வைத்து அணுகும்போது அவர்களைத் திருப்தி செய்வதற்காக அரசு அலுவலகங்களுக்கு வரவேண்டியுள்ளது என்பதையும் ஒப்புக்கொண்டார். என்றாலும் ஊழியர்கள் நேர்மையானவற்றையே முடியும் அல்லது முடியாது என்ற அளவில் விட்டுக்கொடுக்காமல் செய்யவேண்டுமென்றும் கூறினார். சட்ட மன்றத்தில் அரசு ஊழியர்களுக்குத் தன்னால் ஆன எல்லா உதவிகளையும் செய்யத் தயாராயிருப்பதாகவும் அரசும் தயாராக உள்ளது என்ற முறையிலும் அவர் பேசினார். ஆனால் ஊழியர்களை அரசியல் வாதிகள் அணுகும்போது எந்த அளவுக்கு வளைந்து கொடுக்கத்தான் தீரவேண்டியுள்ளது என்பது ஊழியர்களுக்குமட்டுமல்ல, பேசியவர்க்கும் கூடத் தெரியும். தெரிந்தேதான் இப்படிப் பேசினார் என்பதையும் ஊழியர்கள் புரிந்து உள்ளத்தால் கண்ணீர் வடித்திருப்பார்கள்.

பின்னர் முக்கியமாகப் பேசியவர்களில சுதந்திராக்கட்சியைச் சேர்ந்த டாக்டர் ஹண்டே, பொதுச்செயலாளர் அரு.தியாகராசன். எதிர்க் கட்சித் தலைவர் திரு. பொன்னப்பநாடார் ஆகியோர்களைக் குறிப்பிடவேண்டும்.

திரு எட்மண்ட் பேசியவுடன் தலைவர் சிவ இளங்கோ எழுந்து பேசும்போது அலுவலகங்களில் ஏற்படும் தாமதங்களுக்கு ஊழியர்கள் காரணமலல லஞ்சம் கொடுத்தால்தான் காரியம் செய்யவேண்டும் என்பது நோக்கமுமல்ல என்பதை வேதனையோடு கூறி பொதுமக்களுக்கு ஊழியர்கள் பதில் எழுதும்போது பல சட்ட விதிகளை அலசிப் பார்த்து ஆராய்ந்து தான் எழுதவேண்டியுள்ளது. அதற்கு இயல்பாகவே காலதாமதமாகிறது என்பதோடு கீழ்நிலையில் உள்ள ஒருவர் எழுதி வைப்பதை படிப்படியாகப் பல மேலதிகாரிகள் தங்கள் தங்களுக்குரிய காலத்தை எடுத்துக்கொண்டு கையெழுத்துப் போடவேண்டியுள்ளதும் ஒரு காரணமாகும். உதாரணமாக ஒரு சர்வேயர் செய்யும் வேலையை, ஒரு துணை அளவர், ஒரு ஹெட் சர்வேயர், அதற்கு மேல் ஒரு இன்ஸ்பெக்டர், அதன் பின் அஸிஸ்டண்ட் டைரக்டர், டிபுடி டைரக்டர், ஜாயிண்ட் டைரக்டர் இப்படியெல்லாம் மேலதிகாரிகள் பார்வையிடுகிறார்கள். கீழ் அதிகாரிகளைவிட மேற்பார்வையிடும் அதிகாரிகள் அதிகம். அரசு கீழ்மட்டத்தில் ஊழியர்களை அதிகப்படுத்தாமல் வேலைப்பளுவைச் சுமத்தி மேலதிகாரிகளின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டு போகிறது. காலதாமதம் அதனால்தான் ஏற்படுகிறது என்பதை ஆவேசமாக எடுத்துரைத்தார். மாநாடு இந்தப் பேச்சை வரவேற்றது.

அடுத்துப் பேசிய பொதுச் செயலாளர் அரு. தியாகராசன் காலதாமதம் ஏற்படுவதற்கு வேலைப்பளுவோடு சுதந்திரம் கிடைத்த இருபத்தைந்து ஆண்டுகட்குப் பின்னும் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் நமக்குத் தந்து விட்டுப்போன பெரிய பெரிய திண்டு தலையணைகள் போன்ற சட்ட விதிப் புத்தகங்களை அப்படி அப்படியே சுதந்திரம் வந்த பிறகும் வைத்துக்கொண்டிருப்பது முக்கிய காரணம் என்று குறிப்பிட்டார். பொது ஊழியர்கள் நன்னடத்தை விதிகள் (Govt Servants Conduct rules) அரசு ஊழியர்களை மிகக் கேவலமான முறையில் வைத்திருப்பதை வேதனையோடு சுட்டிக்காட்டினார். இவற்றையெல்லாம் மாற்றி சுலபமாக்குவதோடு (simplification) ரகசிய குறிப்புமுறை பகிரங்கக் குறிப்பு முறையென்பவற்றையெல்லாம் அடியோடு அகற்றவேண்டுமென்பதையும் சுட்டிக் காட்டினார்.

அடுத்துப் பேசிய டாக்டர் ஹண்டே முன்னால் பேசியவரின் கருத்தை அப்படியே ஆதரிக்கும் முறையில் பேசினார், தான் முதலில் எம். எல். சி. பதவிக்குப் போட்டியிட்டபோது அரசு ஊழியர்கள் அளித்த வாக்குகள் மூலமாகத் தான், தான் வெற்றி பெற்றதாகவும்,

**சிந்திராமுகன்**

அதனால் என்ஜிஓ. ஊழியர்கள் மீது தனக்குப் பிரத்யேகமான அன்பும் மரியாதையும் உண்டு என்பதைத் தொடக்கத்தில் தெரிவித்துக்கொண்டு பழைய சட்டவிதிப் புத்தகங்களையெல்லாம் மாற்றவேண்டிய அவசியத்தை வலியுறுத்திப் பேசினார். கலெக்டர் என்ற சொல் கூட அப்படியே மாறாமல் இருப்பதைச் சுட்டிக் காட்டினார், அப்போது கூட்டத்தில் ஒருவர் "மாவட்ட ஆட்சித் தலைவர்" என்று கத்தினர். அதற்கு திரு. ஹண்டே "மாவட்ட ஆட்சித் தலைவர்" என்பதற்குச் சரியான ஆங்கில வார்த்தை யென்ன, கலெக்டர் என்ற சொல்லுக்குச் சரியான தமிழ்ப் பதம் எது? என்று திருப்பிக் கேட்டிருந்தால் "மாவட்ட ஆட்சித் தலைவர்" என்று கத்தியவர் உண்மை நிலையைப் புரிந்துகொண்டிருக்க முடியும். ஆனால் திரு. ஹண்டே அப்படிச் செய்யாமல் "ஒரு உதாரணத்திற்கு கலெக்டர் என்று இங்கிலீஷில் இருப்பதை சுட்டிக் காட்டுவதாகக் கூறி விட்டு கீழ் அதிகாரிகள் தவறு செய்தால் அவர்களைத் தண்டிக்க இடமளிக்கும் விதிகள் மேலதிகாரிகள் செய்யும் தவறுகளைக்கீழ் அதிகாரிகள் எடுத்துச் சொல்லவும் தண்டிக்கவும் உரிமையில்லாதிருப்பதை எடுத்துக் காட்டினார் தன்னிடம் சில புகார்கள் அவ்வாறு வந்துள்ளதாகவும், (Govt. Servants conduct rules) என்பது (Govt. Slaves conduct rules) ஆக இருப்பதை எடுத்துரைத்து மேலும் பேசுகையில் மேலதிகாரிகள் செய்யும் தவறுகளுக்கும் சரியான தண்டனை பெறும் முறையில் விதிகள் இருக்க வேண்டும் என்று கருத்துப்பட தன் பேச்சை முடித்துக்கொண்டார்.

பின்னர் எதிர்க்கட்சித் தலைவர் பொன்னப்ப நாடாரும் ஊழியர்களின் கோரிக்கைகளை மனப்பூர்வமாக ஆதரித்து சட்டமன்றத்திலும் அடுத்து வரும் கூட்டங்களிலும் தான் எழுப்புவதாக உறுதியளித்தார்.

திரு. எம். ஆர். வெங்கட்ராமன், திரு. சுரேந்திரன் எம் எல்.ஏ., ஆகியோரும் ஆதரித்துப் பேசினார்கள். திமுகவைச் சேர்ந்த திரு. எ. எல். சுப்பிரமணியம் பேசுகையில் "கலெக்டர் என்ற வார்த்தைக்கு "மாவட்ட ஆட்சித் தலைவர்" என்று நீங்கள் பதில் சொல்லும் அளவுக்கு அரசு பல சீர்திருத்தங்களைச் செய்துள்ளது என்ற ரீதியில் பேசினார். ஆனால் உண்மையில் திமுக ஆட்சிக்கு வருவதற்கு பத்து ஆண்டுகட்கு முன்பே தமிழ் ஆட்சி மொழியாகப் பிரகடனப் படுத்தப்பட்டு விட்டது," மாவட்ட ஆட்சித் தலைவர்" போன்ற சொற்கள் ஏற்கனவே, பழக்கத்திற்கு வந்தவையென்பதைத் தெரிந்து பேசினாரா? தெரிந்தும் மறந்து பேசினாரா என்பது தெரியவில்லை.

மாலையில் என்.ஜி.ஓ. யூனியனின் முன்னாள் (ஓய்வுபெற்ற) தலைவர்கள் டி. வரதராவ், ஆழ்வாரப்பன், குப்புசாமி நாயுடு ஆகியோருக்கு சட்டமன்றத் தலைவர் திரு. மதியழகன் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். காலையில் வந்து பேசுவதாக இருந்த தோழர் எம். கல்யாணசுந்தரம் எம்.பி., மாலையில் 6-30 மணியளவில் வந்து சிறந்ததோர் சொற்பொழிவாற்றினார். இப்படை தோற்கின் எப்படை வெல்லும், தம்பியுடையான் படைக்கஞ்சான் என்றெல்லாம் காலஞ்சென்ற அண்ணாதுரை அவர்கள் கூறியதைச் சுட்டிக் காட்டி, தமிழ்நாட்டில் உள்ள இரண்டரை லட்சம் ஊழியர்களும், அகில இந்தியாவிலும் உள்ள சுமார் 30 லட்சம் ஊழியர்களும் ஒன்று திரண்டு விட்டால் இப்பெரும்படையைகண்டு எந்த அரசாங்கமும் பணிந்தேயாக வேண்டும் என்பதைச் சுட்டிக்காட்டி. ஊழியர் ஒற்றுமையோடு போராட வேண்டும் என்று வலியுறுத்தினர். நீங்கள் யாருக்கும் அஞ்சவேண்டியது இல்லை. அதேசமயம் நான் திமுகவைச் சேர்ந்தவன், அதனால் அலுவலகத்தில் வேலை செய்யமாட்டேன்; நான் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவன் அதனால் வேலை செய்யமாட்டேன் என்ற மனப்பான்மை சிலரிடம் இருப்பதை விட்டுவிடவேண்டும் என்றும். எந்த அரசியல் கட்சித் தலைவரும் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து ஊழியர்களுக்கு ஊதியம் தருவது இல்லை. நானே முதலமைச்சர் ஆனாலும்கூட என் கையில் இருந்து உங்களுக்கு ஊதியம் தரப்போவதில்லை. அரசாங்கப் பணத்தைத்தான் தரப்போகிறேன். முதலமைச்சர் கருணாநிதியும் உங்களுக்கு பொதுப் பணத்தைத்தான் தருகிறார். எனவே நீங்கள் அரசு ஊழியர்கள். எந்த அரசியல் கட்சிக்கும் அஞ்சாமல் வேலை செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டதோடு, ஊதியம் அதிகம் தருவதற்கு விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும். சாதாரண விவசாயியிடம் கேட்டால்கூட அவன் உற்பத்தி எங்கே முடங்கிக் கிடக்கிறது என்று சொல்வான். இதற்குப் பொருளாதார அறிவு பெற எந்தக் கல்லூரியிலும் பட்டம் பெறவேண்டிய அவசியமில்லை. எனவே, விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும், கள்ளப் பணத்தைத் தைரியமாக வெளிக் கொணர வேண்டும் என்று அழுத்தம் திருத்தமாகப் பேசினர். இவரது பேச்சை மிக அக்கறையோடும் அமைதியோடும் ஆரவாரத்தோடு வரவேற்றும் ஊழியர்கள் கேட்டனர்.

இரவில் 11 மணிக்கு மேல் விஷயாலோசனைக் கூட்டம் என். ஜி. ஓ, இல்ல மாடியில் நடந்தது. பொதுவாக தொழிற் சங்க உரிமை வேண்டும், ஊதியக் குழு சிபாரிசுகளிலுள்ள குறைகளைப் போக்கவேண்டும். மருத்துவப்படி வழங்கவேண்டும், ரகசியக் குறிப்புகள் ஒழிய வேண்டும், நிர்வாக சீரமைப்புக் குழுவில் அரசு ஊழியர் பிரதிநிதியும் இடம்பெற வேண்டும், சட்டமன்ற மேலவையில் என் ஜி, ஓ. பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்பன போன்ற பத்து அம்சக் கோரிக்கைகள் ஒருபுறம் இருந்தாலும், மறுநாள் காலை நடைபெறவிருக்கும் கூட்டத்தில் பேசவிருக்கும் முதல் அமைச்சர் கோரிக்கைகள் குறித்து ஏதாவது உறுதிமொழி அளிக்கவேண்டும், இல்லையேல் உடனடியாக மேற்கொண்டு தொடர் நடவடிக்கை குறித்து (மாற்று நடவடிக்கை பற்றி) இந்த மாநாட்டிலேயே முடிவு எடுக்க வேண்டும் என்ற உணர்வு ஊழியர்களிடையே மேலோங்கி நின்றது. இந்த உணர்வு தீர்மான வடிவத்தில் முந்திய நாள் செயற்குழுக் கூட்டத்தில் வந்தபோதும் சரி, விஷயாலோசனைக் கூட்டத்திலும் சரி. தலைமையினரால் மழுங்கடிக்கப்பட்டு விட்டது என்று வேதனையோடு பல ஊழியர்கள் கூறினர்கள். தலைவர்கள் வேகமாகவும் ஆவேசமாகவும் பேசுகிறார்களே தவிர செயலில் வரும்போது பின்னடைகிறார்கள் என்றும் பலர் வருத்தப்பட்டார்கள்.

மறுநாள் 20-2-72 காலை 9 மணியளவில் பெரியார் சிலையிலிருந்து புறப்பட்ட ஊர்வலம் சிறப்பாக இருந்தது, கடைநிலை ஊழியர் கூட தங்கள் பதாகையுடன் இந்த ஊர்வலத்தில் பங்குகொண்டது குறிப்பிடத்தக்கது. பெண்களும் அணியணியாக அணிவகுத்துச் சென்றனர். சுமார் 30 பஸ்களும் ஊர்வலத்தின் கடைசியில் அணிவகுத்தன. ஆங்காங்கு பல பஸ்கள் நகர்களில் நின்றுகொண்டிருந்தன. குறிப்பிட்ட சில கோஷங்கள் தவிர ஒருசில பகுதிகளில் "வடிக்காதே வடிக்காதே நீலிக்கண்ணீர் வடிக்காதே" என்ற கோஷமும் வெளிப்பட்டது. இதுபோன்ற பெரும் ஊர்வலத்தில் இதுமாதிரியான உணர்வுகளைக் கட்டுப்படுத்துவது இயலாதுதான். பொதுவாக ஊர்வலத்தினர் மிகக் கண்ணியமான முறையிலேயே நடந்துகொண்டனர். 11-00 மணிக்குமேல் கூட்டம் தொடங்கியது. நேரு கலையரங்கம் முழுவதும் கூட்டம் நிரம்பி வழிந்ததோடு வெளியில் மைதானத்திலும்கூட ஆயிரக்கணக்கானவர்கள் கடும் வெயிலைக்கூட பொருட்படுத்தாமல் அமைச்சர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டனர். தங்கள் கைகளில் உள்ள பத்திரிகைகளைத் தலைக்குமேல் குடையாக விரித்துக் கொண்டும், சிலர் பத்திரிகைகளைக் கீழே விரித்து உட்கார்ந்து தலையிலே கைக்குட்டையைக் கட்டி வெயிலின் கடுமையைக் குறைத்துக்கொண்டும் பரிதாபமான முறையிலே உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தது உள்ளத்தைத் தொடுவதாக இருந்தது. ஆனால் அத்தனை பேருடைய கவனமும் முதலமைச்சர் என்ன சொல்லப் போகிறார் என்ன உறுதிமொழி தரப்

(அடுத்தப் பக்கம் பார்க்க)

(முன் பக்கத் தொடர்ச்சி)

போகிருர் என்பதிலேயே இருந்தது என்பது அவர்களது தோற்றத்தில் வெளிப்பட்டது.

அமைச்சர் ராசாராம் பேசினர். இதே சேலத்தில் 40 ஆண்டுகளாகத் தீர்க்கப்படாமலிருந்த பிரச்சினைகள் பற்றி பத்திரப் பதிவு இலாகாவினர் மாநாடு கூட்டி முதல்வர் கலைஞரை அழைத்துத் தெரிவித்ததாகவும் 10 கோரிக்கைகளில் 8 கோரிக்கைகளை அங்கேயே ஏற்றுக் கொண்டதாக முதல்வர் அறிவித்ததும் தாம் கேட்பது உண்மைதானு என்ற அதிர்ச்சியில் 10 அதிகாரிகள் மயக்கம் போட்டு விழுந்ததைத் தானே நேரில் பார்த்ததாகவும் "இப்போது நீங்கள் என்ன ஆகப் போகிறீர்களோ தெரியாது" என்று கூட்டத்தைப் பார்த்துப் பேசி பெரிய கைதட்டலைப் பெற்றுக் கொண்டார். அடுத்து வீடு கட்டும் திட்டம் ஒன்றை அரசு உருவாக்கியிருப்பதாகவும் ஊழியர்கள் தினம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் ஐந்து ஆண்டுகட்கு சேமித்து வந்தால் ஐந்தாண்டு முடிவில் 6000 ரூபாய்க்கு அரசு வீடு கட்டித்தரும் என்றும், தினம் ரூ 2 சேமித்து வந்தால் 5 ஆண்டுகட்குப் பின் ரூ. 12000 பெறுமான வீடு கட்டித்தரும் என்றும் தினம் ரூ. 3 சேமித்துவந்தால் 5 ஆண்டில் ரூ. 18000 பெறுமான வீடு கிடைக்கும் என்றும், ஊழியர்கள் சேமித்த பணம் போக மீதியை 15 ஆண்டுகளில் தவணைகளாகச் செலுத்தலாம் என்றும் அறிவித்தார். இதைக் கேட்ட ஊழியர்களின் உள்ளமெல்லாம் அழுதது. தினம் ரூ. 1 வீதம் மாதம் 30 ரூபாய் சேமிக்கும் அளவுக்கு ஊழியர்களுக்கு வசதியிருந்தால் இப்படி ஏன் வெயிலில் பரிதாபமாக நிற்கவேண்டும். வாங்கிய சம்பளத்தில் பிடித்தங்கள் மூன்றில் ஒரு பகுதி போய்விடுகிறது. மீதிப் பணம் அந்தந்த மாதச் செலவுகளுக்கே போதாமல் நகைகளையெல்லாம் வட்டிக் கடையில் அடகுவைத்து கடன் பட்டுத் திண்டாடும் நிலையில் உள்ள என். ஜி. ஓ. தினம் ஒரு ரூபாய் சேமித்து வைக்கும் நிலையிலா இருக்கிருன்? அப்படியே சேமித்தாலும் ஐந்தாண்டு முடிவில் கட்டப்படும் ரூபாய் 6000 பெறுமான வீடு எப்படியிருக்கும்? 12000 ரூபாய்க்கு வீடு கட்டினுல் ஓரளவு போதுமானதாயிருக்கும். ஆனுல் அதற்கு மாதம் 60 ரூபாய் சேமிக்க வேண்டுமே? முடியுமா? 18000 ரூபாய் வீட்டைப்பற்றி நினைக்கவே வேண்டாம். தினம் 3 ரூ வீதம் மாதம் 90 ரூபாயைச் சேமிக்க எந்த என். ஜி. ஓவினுல் முடியும்? ஏதோ பேசினர் அமைச்சர்! விதியே என்று கேட்டார்கள் ஊழியர்கள்! அடுத்து அமைச்சர்கள் ப. உ. சண்முகம், நெடுஞ்செழியன் ஆகியோர் தம் பேச்சுக்களில் குறிப்பிடத்தக்கதாக எதையும் கூறுவதற்கில்லை. கடைசியாக முதலமைச்சர் பேச எழுந்தார்.

தொடக்கத்தில் தலைவர் சிவ. இளங்கோ தலைமையுரையில் ஊழியர்களின் குறைகளை தெள்ளத் தெளிவாக ஆவேசமாக அழகாகப் பதியும்வண்ணம் எடுத்துரைத்தார். ஆனுல் முதலமைச்சர் பேசுகிருர் என்பதை முண்டியடைத்துக் கொண்டு ஊழியர்கள் கேட்கத் தயாரான நிலையில் அவரிடமிருந்து "பாருங்கள் பாருங்கள் பட்ஜெட்டைப் பாருங்கள்" என்ற அளவில்தான் பேச்சைக்கேட்க முடிந்தது. இது ஊழியர்களிடையே பெருத்த சோர்வையே தோற்றுவித்தது. ரகசியக் குறிப்பேட்டு முறையை ஒழித்து பகிரங்கக் குறிப்புமுறை கொணடுவரப்பட்டதைக் குறிப்பிட்டுவிட்டு அதையும் எடுத்துவிடப்போவதாக முதல்வர் கூறியது சிறிது உற்சாகத்தை ஏற்படுத்தினுலும் எல்லா ஊழியர்கள் விஷயத்திலும் எந்த ரூபத்திலும் மேலதிகாரிகளின் கழுத்துப்பிடியிருக்காது என்ற உறுதிமொழி அவரது பேச்சில் கிடைக்கவில்லை.

# சேலம் மாநாட்டுச் .

செட்டில்மெண்ட் இலாகாவில் வேலையிழப்பதற்கிருக்கும் சுமார் 200 ஊழியர்களின் வேலை மேலும் இரண்டு மாதங்களுக்கு நீடிக்கப்பட்டு பின்னுல் வேறு துறைகளில் அவர்கள் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள் என்ற உறுதிமொழி ஓரளவு ஆறுதல் அளிக்கக் கூடியது. எல்லோரும் இரண்டு மாதங்களுக்குள் அவர்கள் அத்தனை பேர்களும் பல்வேறு துறைகளில் நுழைக்கப்பட்டுவிடுவது சாத்தியம்தானு என்ற கேள்விக் குறியும் அங்கே எழுகிறது! அது சாத்தியமானுல் மகிழ்ச்சி அளிக்கக்கூடியதே.

இது தவிர, தலைமையுரையில் திரு. இளங்கோ ஊதியக் குழுவின சிபார்சினுல் கீழ்த்தட்டு ஊழியர்களாயுள்ள பெரும்பாலோருக்கு மொத்தத்தில் இடைக்கால நிவாரணக் கோரிக்கையான ரூ. 30 கூடக் கிடைக்கவில்லை, அதிகாரிகளுக்குத்தான் அதிகம் கிடைத்தது என்று குறிப்பிட்டார். அதை முதலமைச்சர் திரித்து— ஊதியக் குழு சிபார்சினுல் அதிகாரிகளுக்கு வழங்கபபட்டது 2 கோடிதான், மீதி 21 கோடி ஊழியர்களுக்குத்தான் வழங்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டது வருத்தமளிப்பதாக இருந்தது. ஊழியர்களுக்கு வழங்கப்பட்டது மொத்தம் 21 கோடியென்ருலும் அது லட்சக் கணக்கான ஆசிரியர்கள், கடைநிலை ஊழியர்கள் ஆகியோருக்கும் சேர்த்துத்தான் என்பதும் தலைக்கு சராசரி ரூ. 20 தான் ஊதியக்குழு சிபார்சினுல் கிடைத்துள்ளது என்பதும மாண்புமிகு முதல்வருக்குத் தெரியாததல்ல. மொத்தத்தில் உங்களுக்கு 21 கோடி அவர்களுக்கு 2 கோடிதான் என்ற அளவில் முதல்வர் பேசியதை ஊழியர்கள் வருத்தத்துடன் கேட்டார்கள். வேறு என்ன செய்ய முடியும்? எத்தகைய ஆவலுடன் ஊழியர்கள் முதலமைச்சரின் பேச்சை எதிர்பார்த்தார்களோ அதற்கு நேர்மாருன உணர்வினைத்தான் ஊழியர்கள் பெற்றுர்கள். மொத்தத்தில் மாநாட்டின் கோரிக்கைகள் தெள்ளத் தெளிவானவை. நியாயமானவை. அவை வெளியிடப்பட்ட முறையும் நன்ருகவே இருந்தது. ஆனுலும் முதலமைச்சரிடமிருந்து ஆறுதலான உறுதி மொழிகளைப் பெறமுடியவில்லையென்பதில் ஏமாற்றமே.

இந்த மாநாட்டில் படத் திறப்பு விழாக்கள் ஏற்கனவே குறிப்பிட்டதுபோலகண்காட்சி, பட்டிமன்றம், கவியரங்கம் முதலியன நடைபெற்றன. பட்டிமன்றம், கவியரங்கம் போன்ற அம்சங்கள் புதுமையானவை.

மேலும் ஊழியர்களின் பொது கருத்தை அறியும் முறையில் பல மாவட்டங்களிலிருந்தும் வந்திருந்தவர்களைப் பரவலாகப் பேசச் செய்திருக்கலாம். பலருக்கும் பேசச் சந்தர்ப்பங்கள் கொடுத்து அவர்களின் மனே நிலையை அறிந்து கொள்ள தலைமையினர் முயற்சி செய்திருந்தால் பயனுடையதாயிருந்திருக்கும்.

மொத்தத்தில் மாநாடு முடிந்தது! ஒரு வேளை வரப்போகும் பட்ஜெட்டில் பலன் தெரியுமோ என்னவோ? ஆனுல் இன்றைய நிலையில் சூசகமாகக்கூட ஏதும் தரிய விலலை. அதிகப் பொருளாதாரச் சிக்கலில்லாத சிலவற்றிலாவது, அதாவது நிர்வாகச் சீர்திருத்தக் குழுவில் என். ஜி. ஓ. பிரதிநிதியைச் சேர்ப்பது, சட்டமன்றத்தில் மேலவையில் ஒரு ஸ்தானம் ஒதுக்குவது தொழிற்சங்க உரிமை, ரகசியக் குறிப்பு முறையை அடியோடு எல்லா மட்டத்திலும் எந்த உருவத்திலும் இல்லாமல் செய்வது போன்றவற்றில் திட்டவட்டமான அறிவிப்புகளை முதலமைச்சர் செய்திருக்கலாம். மேலதிகாரிகள் செய்யும் தவறுகளைத் தைரியமாக கீழ்நிலை அதிகாரிகள் எடுத்துச் சொல்லும் உரிமை, அப்படி உரிமையைப் பெறும்போது ஏற்படும் மேலதிகாரிகளின் தாக்குதலிலிருந்து கீழ்அதிகாரிகளுக்கு பாதுகாப்பு ஏற்பாடு போன்ற ஜீவாதாரமான உரிமைகளை வழங்க அரசுக்கு எந்தத் தடையும் இருக்க முடியாது, அதனல் நிர்வாகத்தில ஒரு தூய்மையும், நேர்மையும் ஏற்பட முடியும். அதல்லாதவரை மேலதிகாரிகளின் வல்லடித்தனங்களால் தான்தோன்றித்தனமான போக்குகளால் நிர்வாகம் தட்டிக் கேட்பாரின்றிச் சீர்குலையுமே தவிர, மேலும் சீரழிந்து கொண்டிருக்குமே தவிர, நிர்வாகம் தூய்மை பெருது மேலும் ஒரு பேச்சாளர் குறிப்பிட்டதுபோல இராமநாதபுரம் மாவட்டத்தில் ஒரு எம்.எல்.சி. ஒரு பஞ்சாயத்து யூனியன் அலுவலரை அடித்ததுபோலப் பல இடங்களில் மேலும் நடைபெற வண்ணம் அரசியல்வாதிகளின் தலையீட்டை அரசு தவிர்க்க வேண்டும். அதற்கான முறையில் அமைச்சர்கள் சிந்திப்பதாக அவர்களின் பேச்சுக்களில் ஏது தெரியவில்லை. நிர்வாகம் சீர்திருத்தங்களுக்கு இவையெல்லாம் மிகமிக அவசியம். இதற்காகவே மாநாடு தனது பிரதிநிதியை நிர்வாகச் சீரமைப்புக் குழுவில் சேர்க்கவேண்டும் என்றுகேட்கிறது. இதில்என்ன தடையிருக்கிறது என்று தெரியவில்லை. பொதுவாக கீழ்நிலை ஊழியர்களை மேல்நிலை அதிகாரிகளைக்கொண்டு மிரட்டி நிர்வாகத்தை நடத்தலாம் என்ற போக்கை மாநாடு கவலையோடு சுட்டிக்காட்டியதற்கு திட்டவட்டமாகப் பதில் கொடுக்கப்படவில்லை. மாருக, "நாங்கள் உங்களைவிட்டு விலகமாட்டோம். நீங்கள் எங்களைவிட்டு விலகாமல் இருக்கவேண்டுமே என்று நாங்கள்தான் கவலைப்படுகிறேம்" என்பதுபோன்ற அலங்காரமாகச் சொல்லப்பட்ட பதில்கள் மனநிறைவைத் தரவில்லை.

இறுதியாக பிற்பட்டோர் நல அமைச்சர் குறிப்பிட்டதுபோல அல்லது எதிர்பார்த்ததுபோல முதலமைச்சரின் பேச்சைக் கேட்டு ஒரு என். ஜி. ஓ. கூட மயக்கம்போட்டு விழுந்துவிடவில்லை என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும்.

மொத்தத்தில் மாநாடு இன்றைய நிலையில் என்.ஜி.ஓ.க்களின் ஒற்றுமையையும் உணர்ச்சியையும் வெளிக்காட்டும் மாநாடாக இருந்தது.

# நாமக்கல் போலீஸ் நிலையத்தில் நடந்த அட்டூழியம்?

இந்தியக் கம்யுனிஸ்ட் கட்சியின் சேலம் மாவட்டச் செயலாளர் கே. வி. இராமசாமி பத்திரிகைகளுக்கு விடுக்கும் அறிக்கை—

"26-2-72 அன்று பிற்பகல் 4 மணிஅளவில் நாமக்கல்லில் 55 வயது நிரம்பிய சின்னப்பனையும் மற்றும் சிலரையும் சீட்டாடினுர்கள் என்று காரில் ஏற்றி போலீசார் காவல் நிலையத்துக்குக் கொண்டு வந்தனர். அவர்களைப் பிடித்த இடத்திலேயே சின்னப்பனை நன்ருக அடித்ததாகத் தெரிகிறது.

அதன் பின் காவல் நிலையத்தில் என்ன நடந்தது என்பது தெரியவில்லை. மாலை 5 மணி அளவில் சின்னப்பன் மண்டார். உடனே போலீசார் அவருடைய பிரேதத்தை நாமக்கல் அரசாங்க ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர். அவர் விஷம் சாப்பிட்டு மரத்தடியில் மாண்டு கிடந்ததாகவும், அனுதையாகக் கிடந்த அவரது சவத்தை ஆஸ்பத்திரியில் பரிசோதனைக்கு அனுப்பியதாகவும் போலீஸ் தரப்பில கூறப்பட்டதாகத் தெரிகிறது. அவருடைய மூக்கில் ஏதோ ஊற்றப்பட்டு பஞ்சு வைத்து அடைக்கப்பட்டிருந்தது.

மாண்டுபோன சின்னப்பன் மடியில் சுமார் 1500 ரூபாய் இருந்ததாகக் கூறப்படுகிறது. அந்தப் பணம் என்ன ஆயிற்று என்பது தெரியவில்லை.

அடுத்த நாள் மாலை 4 மணி அளவில் சேலம் மருத்துவ நிலையத்தைச் சேர்ந்த மருத்துவஅதிகாரியினுல் பிரேத பரிசோதனை நடத்தப்பட்டது. அதன்பின் நாமக்கல் கோட்ட ஆட்சித் தலைவரால் பிரேத விசாரணையும் நடத்தப்பட்டது. அப்போது நானும் உடனிருந்தேன். பிரேதத்தின் இடது நெற்றியிலும், வலது பொட்டிலும் காயங்கள் இருப்பதாகவும் ஆண் குறியின் மேல்தோலில் 2 அங்குல நீளக் காயம்இருப்பதாகவும் மருத்துவ அதிகாரி விசாரணையின்போது கூறியுள்ளார். விசாரணையில் கலந்துகொண்ட பஞ்சாயத்தார்கள் அவர் காவல் நிலையத்தில் தான் அடித்துக் கொல்லப்பட்டிருக்க வேண்டுமென்றும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

இச்செய்தி நாமக்கல் நகர மக்களிடையே மிகுந்த பரபரப்பை உண்டாக்கியுள்ளது. உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்கவேண்டிய காவல் நிலையத்திலேயே இத்தகைய காரியங்கள் நடக்கிறதே என்று கவலைப்படுகின்றனர். சின்னப்பன் விஷம் குடித்து மாண்டிருந்தால் அவர் மீது காயங்கள் இருக்க வேண்டிய அவசியமென்ன? அவர் சாவின் மர்மம் என்ன? அவரைச் சாகடித்த சண்டாளர்கள் யார்? அவர் மடியில் இருந்த பணம் என்ன ஆயிற்று? இவைகளையெல்லாம் நாமககல் நகர மக்களிடையே எழுந்துள்ள கேள்விக் குறிகள்!

1. எனவே, அவர்களின் கொலையைப் போக்கவும், உண்மையான குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கவும் அரசுஉடனே ஒரு நீதி விசாரணை நடத்த வேண்டும்.

2. பிரேத விசாரணையின் போது சாட்சியம் கொடுத்தவர்களைப் போலீசார் தங்களின் அடியாட்களைக்கொண்டு அச்சுறுத்தி வருகின்றனர். இதனு அவர்கள் மிகவும் பீதியடைந்துள்ளனர். எனவே, நாமக்கல் போலீஸ் சப் இன்ஸ்பெக்டரை உடனே வேறு மாவட்டத்திற்கு மாறுதல் செய்யவேண்டும்.

3. இறந்து போனவரின் குடும்பத்திற்குப் போதிய நஷ்டஈடு வழங்கவேண்டும்.

இந்த 3 நடவடிக்கைகளையும் தாமதமின்றி நிறைவேற்ற அரசு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறேன்."

திருப்பூரில்:

# பனியன் தொழிலாளர்களின் மறியல் போராட்டம்!

21-2-72ம் தேதி மறியல் என்று அறிவிக்கப்பட்டபடி உடனடியாக மறியலை அன்று மேற்கொள்ளாமல், மாவட்டக் கலெக்டர் அவர்கள் பிரச்சினையை சுமுகமாகத் தீர்க்க முதலாளிகளையும், தொழிற்சங்கத் தலைவர்களையும் அவரது அலுவலகத்தில் கூட்டிவைத்துப் பேச்சுவார்த்தை நடத்தினர்.

எனவே, முன்கூட்டியே அறிவிக்கப்பட்டபடி மறியல் நடத்தாமல் மாவட்டக் கலெக்டர் முன்னுல் நடத்திய பேச்சுவார்த்தையின் முடிவினை எதிர்பார்த்து நிறுத்திவைத்தனர், ஆனுல், பனியன் முதலாளிகள் கலெக்டர் அவர்களால் சொல்லப்பட்ட ஆலோசனைகளையும் அகம்பாவமாக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர்.

எனவே, 22-2-72ம் தேதி அன்றுகாலை 10 மணிக்கு ஏஐடியூசி திமுக மற்றும் சிஐடியூ சங்கங்களிலிருந்து ஆயிரக்கணக்கான பனியன் இளம் தொழிலாளர்கள் முஷ்டியைத் தூக்கி முதலாளிகளின் அகம்பாவத்தை எதிர்த்து, கோரிக்கைகளை வலியுறுத்தி முழங்கி வந்தனர்.

அந்தந்த சங்கத்தின் சார்பாக அணிவகுத்த பனியன் தொழிலாளர்கள் தபால் ஆபீஸ் முதலாளிகள் சங்க அலுவலகம், தாலுகா அலுவலகம் முன்னுல் இருபது தோழர்கள் வீதம் மொத்தம் இன்று 60 தோழர்கள் கைது செய்யப்பட்டனர்.

தோழர்கள் மறியல் செய்கிற போது பல்லாயரக்கணக்கான மக்கள் திரள் கரவொலி எழுப்பி மகிழ்ச்சிக்குரல் கொடுத்தனர். இறுதியில் 5000க்கு மேற்பட்ட தொழிலாளர் ஊர்வலம் நடைபெற்றது.

கோரிக்கை நிறைவேறும் வரை இந்த மறியல் போராட்டம் தொடர்ந்து நடைபெறும் என்று ஏஐடியூசி சங்கத் தலைவர்கள் பத்திரிக்கையாளர்களுக்கு அறிவித்தனர். எனவே தொடர்ந்து மறியல் நடைபெறும்.

செய்தி: திருப்பூர் சுப்பராயன்

# பெருங்கொடுமை!

அமெரிக்க மண்மீது
ஆசைகொண் டோடிவந்து
தமதன்னை நாடென்ற
தனியுடைமை மானிடரே
சுதந்திரமாய் வாழ்ந்துவந்த
சூதில்லா நீக்ரோவை
உதைத்துப் பிடித்துங்கள்
உரிமையாய்க் கொண்டீரே
அடியாத மாடென்றும்
படியாது என்றெண்ணி
அடித்தீரே வதைத்தீரே
அநியாயம் செய்தீரே
இரவுபகல் பாராமல்
எப்போதும் அவர்களைத்தான்
விரட்டிவேலை வாங்கியதால்
விரைவாகப் பொருள்
குவித்தீர்
சாறெடுத்த தேன்கரும்பின்
சக்கையை வீசுதல்போல்
வேறுபடுத்தி நீக்ரோவை
வரட்டும நீங்கள்
மானிடரோ?
வெளுத்தஉடல் கொண்டாலும்
வெளுப்பில்லை உங்கள்மனம்
வெளுப்பில்லை கருப்பெனினும்
வெளுப்பன்ருே அவர்கள்
மனம்?
குடியேறி வந்தஉங்கள்
குடியேற, நீக்ரோவைக்
குடியேறச் செய்ததனுல்
குடியுரிமை உண்டவர்க்கும்
எங்களுக்குக் குடியுரிமை
இன்றேதா என்றுரைத்த
அஞ்சேலா டேவிஸைத்தான்
அடைத்திருத்தல்
பெருங்கொடுமை!

—அறவேந்தன்

# அரசாங்கச் செலவில் கழகப் பிரச்சாரம்:

## எரிமலை

அருந்ததி நாராயணன்

எதற்குமேஒரு அளவுண்டு.

அளவையெல்லாம் கடந்து தமிழ்நாட்டில் திமு கழகத்தின் பிரச்சாரநாடகம் நடந்துகொண்டிருக்கிறது.

லாட்டரி விளம்பரமா?

கருணாநிதியின் திருமுகம்!

சிறுசேமிப்பு விளம்பரமா?

கருணாநிதியின் திருமுகம்!

குடிசை மாற்றுவாரிய விளம்பரமா?

கருணாநிதியின் விளம்பரம்!

மின்வாரிய விளம்பரமா?

கருணாநிதியின் திருமுகம்!

கருணாநிதியின் திருமுகத்தை திமுகழகத்தார் வெளியிடும் சுவரொட்டிகளில் தாராளமாக வெளியிட்டுக் கொள்ளட்டும்...

நமக்கு ஆட்சேபணை இல்லை!

ஆனால்—

மேலே கூறப்பட்டவை அனைத்தும் அரசாங்க இலாகாக்களின் விளம்பரங்களாகும்.

அரசாங்கத்துறை விளம்பரங்களில் எல்லாம்—தேவை இருக்கிறதோ இல்லையோ — தமிழ்நாடு அரசாங்கத்தின் 'டிரேட் மார்க் சின்னம்' போல கருணாநிதியின் முகவிலாசத்தைப் போடுகிறார்கள்.

கருணாநிதியின் முகம்தான் தமிழ்நாட்டு அரசின் சின்னம் என்று எப்போது முடிவெடுக்கப்பட்டது?

அரசாங்கம் வெளியிடும் 'தமிழரசு' பத்திரிகையைப் புரட்டினால் அட்டைப் பக்கம் தொடங்கி முடிகிற பக்கம்வரை கருணாநிதியின் நவரச முக பாவங்கள்தான்!

தமிழ்நாடு அரசு வெளியிடும் செய்திப் படங்களின் நிரந்தரக் கதாநாயகன் கருணாநிதிதான்!

கதாநாயகன் மட்டுமல்ல— வில்லன், காமடியன் எல்லாமே கருணாநிதிதான். ஏனென்றால் அந்தப் படத்தில் முழுமையும் அவரேதானே காட்சியளிக்கிறார்?

குடும்பக் கட்டுப்பாடு பேனர்கள் தமிழ்நாடு முழுதும் வைக்கப்பட்டன.

"நாமிருவர் நமக்கிருவர்" என்று கருணாநிதி கண்ணசைத்துக் கூறுவது போல பேனர்கள் வைக்கப்பட்டன.

"அருவெறுப்பான சினிமா விளம்பரம் போல இருக்கிறது" என்று தோழர் கல்யாணசுந்தரம் அந்தப் பேனரைப்பற்றிக் கூறினார். நாடே எதிர்த்த பிறகு, நாடு முழுதும் வைக்கப்பட்டிருந்த அந்த பேனர்களில் "நாமிருவர் நமக்கிருவர்" வாசகங்கள் மீது சாயம் பூசி மறைத்துவிட்டு இப்போது கருணாநிதியின் 'கவிதை மாதிரி' வசனத்தை எழுதியிருக்கிறார்கள்.

இதற்கிடையில் 'நமக்கிருவரை' அழிக்கவும் புதிய வாசகத்தை எழுதவும் குத்தகைக் கொள்ளை எவ்வளவோ?

குடும்பக் கட்டுப்பாடு விளம்பரத்துக்கும் 'போஸ்' கொடுத்த முதலமைச்சர் வேறு எந்த மாநிலத்திலாவது உண்டா? விவரம் தெரிந்தவர்கள் தெரிவிக்கலாம்!

"திரும்பிய பக்கமெல்லாம் கருணாநிதியின் திருமுகமே தெரிய வேண்டும். கருணாநிதியின் திருப் பெயரே துலங்கவேண்டும். சிறியோர் முதல் பெரியோர்வரை கருணாநிதியின் திருமுகத்தைப் பார்த்தும், திருப் பெயரைப் படித்தும் போகிற வழிக்குப் புண்ணியம் தேடிக்கொள்ள வேண்டும்" என்று அரசுத் துறை அதிகாரிகள் நினைக்கிறார்களா?

அல்லது—

கருணாநிதியே அப்படிக் கருதுகிறாரா?

தெரியவில்லை!

'தமிழக அரசுச் செய்திப் படம் வெளியிடப்படுகிறது.

அண்மையில் அப்படி ஒரு படத்தை பார்க்க வேண்டிய துர்ப்பாக்கியம் ஏற்பட்டது.

'தமிழ்நாடு அரசு' என்ற பெயருடன் தமிழக அரசின் சின்னமான கோபுரம் அந்தப் படங்களின் துவக்கத்தில் காட்டப்பட்டு வந்தது.

அதில் சமீபத்தில் ஒரு மாறுதல் செய்திருக்கிறார்கள்.

'தமிழ்நாடு அரசு' என்ற வட்டத்திற்குள் இருந்த கோபுரத்தை வெட்டிவிட்டு- இப்போது—

அந்த இடத்தில் அண்ணாத்துரையின் சமாதியைக் காட்டுகிறார்கள்.

அண்ணாத்துரையின் புதை குழி தமிழக அரசின் அதிகாரபூர்வமான சின்னமாக மாற்றப்பட்டுவிட்டதா?

யாரைக் கேட்டு மாற்றினார்கள்?

அண்ணாத்துரையின் சமாதி என்பது கருணாநிதிக்கும் அவரைச் சேர்ந்த கழகத்துக்காரர்களுக்கும் புனித ஸ்தலமாக இருப்பதிலே நமக்கு ஆட்சேபணையில்லை.

ஆனால்—

நாலரைக்கோடி தமிழர்களின் தமிழ் நாட்டின் தேசிய சின்னமாக மாறுவதற்கோ, மாற்றுவதற்கோ அண்ணாத்துரை சமாதி தகுதியானதுதானா?

காந்திஜீயின் சமாதியையோ நேருஜியின் சமாதியையோ அசோகச் சக்கரத்திற்குப் பதிலாக தேசிய சின்னமாக யாரும் மாற்றிவிடவில்லை.

அண்ணாத்துரை என்பவர் திமுகழகத்தின் மூலவர், தலைவர், அந்தக் கழகத்தின் சார்பில் முதன் முதலாக முதல் மந்திரியானவர்.

அந்த ஒரே காரணத்திற்காக அவரது சமாதியை தமிழ்நாட்டின் சின்னமாக மாற்றுவதா?

அண்ணாத்துரை திமுகழகத்தின் தலைவர்.

அவரது சமாதியை தமிழ் நாட்டின் சின்னமாக்கி தமிழ் நாட்டு அரசாங்கச் செலவில் படமெடுத்து ஊர் முழுவதும் திரையிடுவது என்பது அப்பட்டமான திமுகழகப் பிரச்சாரமாகும்.

அரசாங்கச் செலவில்—

திமுகழகப் பிரச்சாரமா?

இதோ மற்றொரு சான்று!

ராஜபாளையம் திமுகழக மாநாட்டில் முஜிபிர் ரஹிமான் படத்தையும் கருணாநிதியின் படத்தையும் இணைத்து பேனர்கள் வைத்திருந்தார்கள்.

# அசைக்க முடியாத ஆதாரம் இதோ!

அதிலே சுயாட்சிப் பிரச்சாரம்.

தமிழ்நாட்டை ஆளுகின்ற திமுகழகத்தின் இன்றைய கொள்கை சுயாட்சி!

அதைப் பற்றிப் பிரச்சாரம் செய்வது அந்தக் கழகத்தின் கடமையாக இருக்கலாம்.

ஆனால்—

ராஜபாளையம் மாநாட்டில் அந்த சுயாட்சிப் பிரச்சாரத்தை கழகத்தின் கொள்கைப் பிரச்சாரத்தை தமிழக அரசாங்கத்தின் ஓர் இலாகாவின் சார்பிலே செய்யப்பட்டிருக்கிறது.

இந்தப் பக்கத்தில் வெளியாகியிருக்கும் படத்தை உற்றுப் பாருங்கள்.

"நாட்டு நன்மைக்கான காரியங்கள் ஆட்களைப் பொறுத்து இருப்பதைவிட அந்தக் காரியங்கள் தானாக நடப்பதற்கேற்ற அரசியல் அமைப்பு இருந்தாக வேண்டும். இதைத்தான் மாநில சுயாட்சி என்கிறோம்"–தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்—

கழகம் கேட்கிற சுயாட்சி பற்றி சந்தேகம் வந்தவர்களுக்கு கழகம் சொல்கிற பதில் இது.

அப்பட்டமான கழகத்தின் பிரச்சாரம்.

இந்தப் பிரச்சாரத்தை கழகத்தின் நிதியிலிருந்து செய்திருந்தால் நமக்கு ஆட்சேபணை இல்லை.

ஆனால்—

அந்தப் படத்தை நன்றாக உற்று நோக்குங்கள்...

வலது கோடியில்—

கீழே...

அந்தப் படத்தை, அது போன்ற ஏராளமான பேனர்களை வெளியிட்டவர்களின் விலாசம் அதிலே தெரிகிறது.

**'மண்டல மக்கள் தொடர்பு அலுவலகம்'**

**Reginol Public Relations Office**

அந்த அலுவலகம்—

தமிழ்நாடு அரசு விளம்பரத் துறையைச் சேர்ந்தது.

தமிழ்நாடு அரசு விளம்பரத் துறை—

எப்போது திமு கழகத்தின் விளம்பரத் துறையாக மாறிற்று?

இந்தத் தவறுக்கு - தவறு திட்டமிட்ட ஊழல்-யார் காரணம்?

அந்தத்துறை அதிகாரியின் திமிரா?

அல்லது

கேட்பதற்கு நாதியில்லை என்று கருதும் ஆளவந்தார்களின் ஆணவமா?

தொட்டதற்கெல்லாம் 'ஆதாரம் எங்கே...... ஆதாரம் எங்கே?" என்று ஆர்ப்பரிக்கும் கருணாநிதியாரே...

இதோ ஆதாரம்!

பதில் என்ன?

எதிர்பார்க்கலாமா?




முஜிபிர் மன்னிக்க வேண்டும். இப்படியொரு படத்தை 'ஜனசக்தி'யில் போட வேண்டிய நிலைமை வந்ததற்கு முஜிபிர் மன்னிக்க வேண்டும்!

தி மு கழகக் கொள்கையை விளக்கும் இந்தப் பேனரை...... இதுபோன்ற பேனர்களை ராஜபாளையம் தி மு கழக மாநாட்டில் வைத்திருந்தார்கள்.

"மண்டல மக்கள் தொடர்பு அலுவலகம்" (அரசாங்கத் துறை) இந்தப் பேனர்களை வைத்திருந்தது.

(படம் உதவி: ராஜலிங்கராஜா, ராஜபாளையம்.)

## சின்னியம்பாளையம் தியாகிகள் நாள் சிங்காநல்லூரில் நடைபெற்றது

1948-ம் ஆண்டு தூக்கு மேடை ஏறிய சின்னியம்பாளையம் வீரத் தியாகிகள் நால்வரின் நினைவு நாள் விழா 16-1-72 அன்று சிங்காநல்லூரில் நடைபெற்றது.

பகல் 1 மணியளவில் சின்னியம் பாளையம் தியாகிகள் நினைவு மேடையிலிருந்து செங்கொடியை ஏந்திய வண்ணம் ஊர்வலம் உப்பிலிபாளையம் தியாகி முத்து மேடைக்குத் தோழர்கள் கொண்டு சென்றனர்.

தியாகி முத்து மேடையில் தோழர் எம். கல்யாணசுந்தரம் எம். பி., செங்கொடி ஏற்றி வைத்தார். சின்னியம்பாளையம் தியாகிகள் மேடையில் நகரச் செயலாளர் தோழர் க. பழனிச்சாமி, செங்கொடி ஏற்றிவைத்தார்.

சைக்கிள் பேரணியொன்று நகர்வலம் வந்தது.

மாலையில் நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் என். மருதாசலம், எம்.எல.ஏ., எல். ஜி. கீதா, கே. டி. கே தங்கமணி, சூ. ர. தங்கவேலு ஆகியோர் உரையாற்றினர்.

சிங்காநல்லூர் பகுதியில் பீளமேடு, பி. ஆர். புரம், சிங்காநல்லூர் என். ஜி. ஆர். திடல், சவுரி பாளையம் ஆகிய நான்கு இடங்களில் முறையே ஜனவரி 10, 20, 23, 26 ஆகிய நாட்களில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பிரச்சாரப் பேரியக்கப் பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

# தேர்தல் களம்

இந்திய நாட்டில் உள்ள 16 மாநிலங்களிலும் இரண்டு யூனியன் பிரதேசங்களிலும் (டில்லி, கோவா) மாநிலச் சட்ட மன்றங்களுக்கான தேர்தல்கள் நடைபெற உள்ளன. வேட்பு மனுக்கள் தருவது, திரும்பப் பெறுவது முதலிய தேர்தலின் முதல்கட்டப் பணிகள் முடிந்துவிட்டன. ஆகையினால், போட்டியிடும் கட்சிகள் பற்றிய விவரங்கள் தெளிவடைந்துள்ளன,

1971-ல் நடைபெற்ற பாராளுமன்றத்துக்கான இடைக்காலத் தேர்தல்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஒரு விஷயம் பிரதானமாகத் தெரிகிறது. அப்பொழுது ஒன்றுகூடி வலுவான எதிர்ப்பைக் கொடுத்த வலதுசாரிப் பிற்போக்குக் கட்சிகள், இப்பொழுது நடைபெற உள்ள தேர்தலில் சிதறிப்போய்க் கிடக்கின்

ஆட்சிப் பொறுப்பை ஏற்றுள்ள ஜனசங்கம், மீண்டும் அதைப் பிடிப்பது இயலாது. மத்தியப் பிரதேச ஆட்சியைக் கைப்பற்றி விடுவோம் என அது கூறுவதும் வெறும் கனவாகத் தான் போகப்போகிறது.

சிண்டிகேட் கட்சியும் மூன்று மாநிலங்களில் தான் தனது கவனத்தைப் பெரிதும் செலுத்தியுள்ளது. குஜராத்தில் நூற்றிநாற்பது இடங்களிலும், மைசூரில், 176 இடங்களிலும், பீகாரில் 298 இடங்களிலும் அது தனது வேட்பாளர்களை நிறுத்தியுள்ளது. அது போட்டியிடும் இடங்களின் எண்ணிக்கையைப் பார்த்து மலைக்க வேண்டியதில்லை. ஏனென்றால், சிண்டிகேட் மிகவும் வலுவாக உள்ளதாகக் கூறப்படும் குஜராத்தில் கூட, பெரும்பான்மை இடங்களைப் பெறமுடியும் என்ற

ஜனநாயக சக்திகளுக்கு எதிராகக் காங்கிரஸ் இயங்குகிறது. மேலும் அனைத்து மாநிலங்களிலும் தனது சொந்தப் பெரும்பான்மையின் அடிப்படையில் ஆட்சியைக் கைப்பற்றுவதே தனது லட்சியம் என்று, காங்கிரஸ் கட்சியின் மத்தியத் தலைமை வெளிப்படையாகவே சொல்லியுள்ளது. இந்தப் பின்னணியில் பார்க்கும்பொழுது, காங்கிரஸ் நிறுத்தியுள்ள வேட்பாளர்களின் பட்டியலைக் கவனிக்க வேண்டியது அவசியமாகிறது.

### காங்கிரசின் வேட்பாளர் பட்டியல்

வேட்பாளர்பட்டியலை மாற்றுவதும், மீண்டும் திருத்துவதுமாகக் காங்கிரசில் ஏக களேபரம் நடந்து கொண்டுள்ளது. பல மாநிலங்களில் மூன்றில் ஒரு பங்குக்கும் மேற்பட்ட பழைய உறுப்பினர்கள் விலக்கப்பட்டு புதுமுகங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. மத்தியப்பிரதேசம், அஸ்ஸாம், ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களில, சிண்டிகேட் மனோபாவம் கொண்ட காங்

சேர்ந்த சிலர், காங்கிரஸ் பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். உண்மையிலேயே முற்போக்கான ஜனநாயகவாதுகளை அதிகார அமைப்புக்குள் அனுமதிப்பது கடினமான வேலைதான். வெறும் சோஷலிசம் பேசுவதைவிட அது சிரமமானதுதான்.

### காங்கிரசில் அதிருப்தியாளர்கள்

காங்கிரஸ் வேட்பாளர்கள் இவ்வாறு பொறுக்கி எடுக்கப்பட்டனர். எனவே காங்கிரசைச் சேர்ந்த அதிருப்தியாளர்கள் பரவலாகப் போட்டியிடுவதில் வியப்பு ஏதும் இல்லை. பல அதிருப்தியாளர்கள் - முன்னாள் அமைச்சர்கள்கூட அவர்களில் உண்டு. ஆந்திரம், குஜராத், அஸ்ஸாம், பீகார் முதலிய மாநிலங்களில் அதிகாரபூர்வமான காங்கிரஸ் வேட்பாளர்களை எதிர்த்துப் போட்டியிடுகின்றனர்.

பங்களாதேஷ் வெற்றியைப் பயன்படுத்திக் கொண்டு முதல் எடுப்பத்ற்கு காங்கிரஸ் முயற்சி செய்கிறது. ஸ்திரத்தன்மை,

# காங்கிரசின் வேட்பாளர் பட்டியல்

றன. அவைகளின் வலுவும் குறைந்துவிட்டது.

### கட்சிகள் நிலை

தேர்தல் நடைபெறும் அனைத்து மாநிலங்களிலும் மொத்தம் 2,700 இடங்கள் உள்ளன. இவைகளில் ஏறத்தாழ 2,500 இடங்களில் போட்டியிடும் காங்கிரஸ் கட்சி பிரதான கட்சியாக உள்ளது. சில மாநிலங்களில் மட்டும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியுடனும் வேறு சில கட்சிகளுடனும் அது தொகுதி உடன்பாடு செய்துகொண்டுள்ளது. அப்படிப்பட்ட மாநிலங்களில், அந்தக் கட்சிகளுக்கு ஒதுக்கப்பட்ட இடங்களில் போட்டியிடாமல் விட்டு வைத்துள்ளது காங்கிரஸ்.

இந்தத் தேர்தலில் மொத்தம் 325 இடங்களுக்கு மேல் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிடுகிறது. காங்கிரசுக்கு அடுத்து, அனைத்து மாநிலங்களிலும், யூனியன் பிரதேசங்களிலும் போட்டியிடும் கட்சி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமேயாகும்.

நம்பிக்கை அதற்கே கிடையாது.

இடதுசாரிக் கட்சி என்ற வேடத்தில், வலதுசாரிப் பிற்போக்கின் மகாக் கூட்டணியோடு சென்ற தேர்தலில் சேர்ந்து நின்ற கட்சி சோஷலிஸ்ட் கட்சி. பீகாரில் மட்டுமே கணிசமான இடங்களுக்கு அது போட்டியிடுகிறது. சுமார் 26? வேட்பாளர்களை அது நிறுத்தியுள்ளது. பீகார் உள்ளிட்டு எந்த மாநிலத்திலும் ஆட்சியைப் பிடிப்போம் என்ற நம்பிக்கை, அந்தக் கட்சியின் தலைவர்களுக்கே கிடையாது.

### காங்கிரஸ்-கம்யூனிஸ்ட்டு உடன்பாடு

மேற்கு வங்கத் தேர்தலில் இரண்டு அணிகளாகப் பிரிந்து

கிரஸ் முதல் அமைச்சர்கள் விரட்டப்பட்டுள்ளனர், பிரதம மந்திரியின் நேரடித் தலையீட்டின் பேரில் இந்த மாற்றங்கள் நடைபெற்றுள்ளன.

இவ்வாறு, பல்வேறு வகையிலும் மாற்றித், திருத்தி, உருட்டிப், புரட்டி எடுத்தபோதிலும் கூட, காங்கிரஸ் வேட்பாளர் பட்டியல்களின், நிலப்பிரபுத்வ ஆதரவு பணக்கார விவசாயி ஆதரவுத் தன்மை சாராம்சத்தில் மாறிவிடவில்லை. மாநில கோஷ்டிகளையும், இந்திராகாந்தியை எதிர்க்கும் பெரிய மனிதர்களையும் ஒழித்துக் கட்டும் வகையில்தான் பல மாற்றங்கள் இருந்தன.

### நிலப்பிரபுக்கள்

எடுத்துக்காட்டாக, ஆந்திர மாநிலத்தைப் பார்க்கலாம்.

ஸ்திரத்தன்மை என்று அது பாடுகிறது. "வறுமையை ஒழிப்போம்" என்று அங்கும் இங்குமாக அவர்கள் குறிப்பிடுகின்றனர். ஆனால், பாராளுமன்றத் தேர்தல்களின் போது இருந்த வேகத்தை இப்பொழுது அதில் காணமுடியவில்லை. நாட்டை எதிர்நோக்கியுள்ள தேசிய, சர்வதேசியப் பிரச்சினைகள் காங்கிரஸின் பிரச்சாரத்தில் இடம்பெறவில்லை. பிரதம மந்திரியின் சில பேச்சுக்கள் மட்டுமே இதற்கு விதிவிலக்கு.

காங்கிரஸ் கட்சியின் தேர்தல் ஏற்பாடுகளில் உள்ள முரண்பாடுகளும், குறைகளும் அதனுடைய தேர்தல் பிரச்சாரத்தில் தெளிவாகத் தெரிகின்றன.

# காட்டுவது என்ன?

மற்றக் கட்சிகள் அனைத்தும் சில மாநிலங்களில் போட்டியிட்டும், சில மாநிலங்களில் போட்டியிடாமலும், பிரதேசக் கட்சிகளாகவே காட்சி தருகின்றன சிண்டிகேட், ஜனசங்கம், சோஷலிஸ்ட். மார்க்சிஸ்ட் முதலிய எந்தக் கட்சியுமே இதற்கு விதிவிலக்கு இல்லை.

வலது பிற்போக்கின் பிரதான கட்சியாக ஜனசங்கம் உள்ளது. மூன்று மாநிலங்களில் அது பெரிய அளவில் போட்டியிடுகிறது; மத்தியப் பிரதேசம், பீகார், டில்லி ஆகியவைகளே அவை, டில்லியில் உள்ள அனைத்து இடங்களிலும் அது வேட்பாளர்களை நிறுத்தி உள்ளது. மத்தியப் பிரதேசத்தில் 35 இடங்களைத் தவிர மீதியுள்ள இடங்கள் அனைத்திலும் அது போட்டியிடுகிறது. பீகாரில் 277 வேட்பாளர்கள் ஜனசங்கத்தின் சார்பில் போட்டியிடுகின்றனர்.

மத்தியப் பிரதேசத்திலும் டில்லியிலும் பெரும்பான்மை பெற்று விடுவோம் என ஜனசங்கத் தலைவர் வாஜ்பேயி கூறுகிறார். ஆனால், நடைபெறும் தேர்தல் போராட்டத்தின் நிகழ்ச்சிகளைப் பார்த்தால் அது சாத்தியமாகுமென்று தெரியவில்லை. டில்லியில் இப்பொழுது

நின்று கட்சிகள் மோதுகின்றன. காங்கிரஸ் கட்சியும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் சேர்ந்து முற்போக்கு "ஜனநாயக முன்னணி"யை அமைத்துள்ளன. மார்க்சிஸ்ட் கட்சியின் தலைமையில் இதர பல கட்சிகள் சேர்ந்து 'இடதுசாரி முன்னணி'யை அமைத்துள்ளன. மார்க்சிஸ்ட் கட்சியின் தலைமையிலான இந்த இடதுசாரி முன்னணியைக் குறைத்து மதிப்பிடுவதற்கில்லை, ஆனாலும் முற்போக்கு ஜனநாயக முன்னணியே பெரும்பான்மைபெறும் என்பதில் ஐயம் ஏதும் இல்லை.

மற்றும் பீகார், பஞ்சாப், ராஜஸதான், மத்தியப்பிரதேசம் முதலிய மாநிலங்களிலும் காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் உடன்பாடு ஏற்பட்டுள்ளது. இந்து வகுப்பு வெறியர்கள், சீக்கிய வகுப்பு வெறியர்கள் முதலிய சமுதாய விரோத சக்திகளை முறியடிக்க இந்த உடன்பாடு பயன்படும். மத்தியப்பிரதேசத்திலும் ராஜஸ்தானிலும் முன்னாள் மன்னர்களையும் சுதந்திரா கட்சியையும் புறங்காணவும் இந்தஉடன்பாடு பெரிதும் பயன்படும்.

ஆந்திரம், மகாராஷ்டிரம், அஸ்ஸாம் முதலிய சில மாநிலங்களில் துரதிருஷ்டவசமாக, வேறு சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. இந்த மாநிலங்களில் இடதுசாரி,

அங்கு, பிற்பட்ட வகுப்புக்களைச் சேர்ந்தவர்களுக்குப் பெரும் எண்ணிக்கையில் காங்கிரஸ் டிக்கெட் கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், இன்னும் கொஞ்சம் நுணுக்கமாக ஆராயும்பொழுதுதான் விஷயம் வெளிப்படுகிறது. இந்தப் "பிற்பட்ட வகுப்பு" வேட்பாளர்களில் மிகப் பெரும் பகுதியினர் பணக்கார விவசாயிகளாவர். நடைபெற்றது என்ன தெரியுமா? பிற்பட்ட வகுப்பினரில் சிலர் புதிதாகச் சொத்துச் சேர்த்துக்கொண்டு பணக்காரர்கள் ஆகி உள்ளனர். அதிகாரத்தில் அவர்களுக்கும் உரிய பங்கினைத் தந்து, பணக்காரர்கள் ஆதிக்கத்தின் அடிப்படை விரிவாக்கப்பட்டுள்ளது. அவ்வளவுதான்.

அனேகமாக அனைத்து மாநிலங்களிலுமே, மிகப் பெரிய நிலப்பிரபுக்கள் காங்கிரஸ் பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். பல சிண்டிகேட் நபர்கள்கூட இடம் பெற்றுள்ளனர்.

சோஷலிசச் செயல்களுக்கான காங்கிரஸ் அரங்கைச் சேர்ந்த (காங்கிரஸ் சோஷலிசப் பேரவை) முற்போக்காளர்கள், காங்கிரஸ் பட்டியலில் இடம் பெறவில்லை!

மேற்கு வங்கத்தில் மட்டுமே இந்த முற்போக்குப் பகுதியைச்

## களத்தில் கம்யூனிஸ்ட் வேட்பாளர் பட்டியல்

பல்வேறு மாநிலங்களிலும் கம்யூனிஸ்ட் வேட்பாளர்கள் போட்டியிடும் இடங்களின் எண்ணிக்கை பின்வருமாறு:

| | |
|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 64 |
| ஹரியானா | 11 |
| மைசூர் | 4 |
| பஞ்சாப் | 13 |
| மேற்கு வங்கம் | 41 |
| அஸ்ஸாம் | 28 |
| மேகாலயம் | 2 |
| பீகார் | 53 |
| குஜராத் | 12 |
| இமாச்சலப் பிரதேசம் | 10 |
| காஷ்மீர் | 1 |
| மத்தியப் பிரதேசம் | 6 |
| மகாராஷ்டிரம் | 48 |
| மணிப்பூர் | 27 |
| ராஜஸ்தான் | 5 |
| திரிபுரா | 11 |
| டில்லி | 4 |
| மொத்தம் | 335 |

## மேற்கு வங்கம்

ஐந்து ஆண்டுகளில் நான்கு பொதுத் தேர்தல்களைச் சந்தித்துள்ள பெருமை மேற்கு வங்கத்திற்கு மட்டுமே உண்டு. ஸ்திரமான ஆட்சியின்றி அல்லல்படும் மாநிலம் இது. அது மட்டுமன்றி, அண்மையில் நடைபெற்ற பங்களாதேஷ் போராட்டத்தின் சுமையின் பெரும்பகுதியை ஏற்று, அதனுடைய நேரடி விளைவுகளை அனுபவித்த மாநிலம் மேற்குவங்கம். எனவே, இங்கு நடைபெறும் சட்டமன்றத் தேர்தல்கள், இந்திய மக்கள் அனைவருடைய கவனத்தையும் கவர்ந்து உள்ளதில் வியப்பேதும் இல்லை.

இந்த மாநிலத்தில் உள்ள அரசியல் கட்சிகள் இரண்டு முனைகளாக அணி திரண்டு இந்தத் தேர்தலில் போட்டியிடுகின்றன. காங்கிரசும் கம்யூனிஸ்ட் கட்சியும் சேர்ந்து அமைத்துள்ள முற்போக்கு ஜனநாயக முன்னணி ஒருபக்கம். மார்க்சிஸ்ட் கட்சியின் தலைமையில் மற்றக் கட்சிகள் அமைத்துள்ள இடதுசாரி முன்னணி இன்னொரு பக்கம்.

இதன் விளைவாகத் தேர்தல் களத்தில் குதித்துள்ள வேட்பாளர்களின் எண்ணிக்கை குறைந்துள்ளது. மொத்தம் உள்ள 280 இடங்களுக்கு 833 வேட்பாளர்களே போட்டியிடுகின்றனர். அதிலும் 95 இடங்களில், இரண்டு முன்னணிகளுக்கும் இடையில் நேரடிப் போட்டி நடைபெறுகிறது.

இடதுசாரி முன்னணி என்ற பெயரைப் பெறுவதற்காக வேண்டி, ஆறு கட்சிகளைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டுள்ளது மார்க்சிஸ்ட் கட்சி. ஆனாலும் 280-ல் 218 இடங்களைத் தனக்கென்றே அது வைத்துக்கொண்டது. மீதியுள்ள இடங்கள்தான் மற்ற கூட்டணிக் கட்சிகளுக்குப் "பெரிய மனதுடன்" விட்டுத் தரப்பட்டுள்ளது.

கூட்டில் சேர்ந்துள்ள இதர கட்சிகளின் சந்தேகத்தைப் போக்குவதற்காக வேண்டி, பெரிய கட்சியான மார்க்சிஸ்ட்டுக் கட்சி, சிறிது சுயவிமர்சனத்தில் ஈடுபட்டுள்ளது. முந்தைய கூட்டணிகளில் தான் செய்த தவறுகளை ஓரளவுக்கு ஒத்துக்கொண்டுள்ளது.

ஆனாலும் கூட, அதனுடைய கூட்டாளிகள் அனைவருமே அதை நம்பிவிடவில்லை. உதாரணமாக அண்மையில் நடைபெற்ற கூட்டணிக் கூட்டம் ஒன்றில் சோஷலிஸ்ட் யூனிட்டி சென்டர் ஒரு பிரச்சினையைக் கிளப்பியது. பிர்லாக்கள் போன்ற ஏகபோகவாதிகள் சிண்டிகேட் ஆகியவை பற்றி மார்க்சிஸ்ட் கட்சியின் கண்ணோட்டம் என்ன என்று அது கேட்டது.

எக்கச்சக்கமான நிலைமையில் மாட்டிக்கொண்ட மார்க்சிஸ்ட் தலைவர்கள், விரைவில் இது பற்றி அறிக்கை விடுவதாகக் கூறினர். ஆனால், இதுபற்றிய அறிக்கை இன்னும் வெளிவரவே இல்லை.

ஏகபோகங்களுடன் மார்க்சிஸ்டுகளுக்கு உள்ள தொடர்புகள் அப்படியொன்றும் ரகசியமாக இல்லை. ஜே திபாசுவும் அவரது கட்சியும் அந்த உதவிகளை ஏ. கே. பிர்லாவே பாராட்டிப் பேசியுள்ளார். மார்க்சிஸ்ட் கட்சி வெளியிட்டுள்ள கொள்கை அறிக்கையில் ஏகபோகங்களையும், முதலாளித்வப் பாதையையும் பற்றி எதுவுமே இல்லை. ஆனால், மத்திய அரசாங்கத்துக்கு எதிராக மட்டுமே விஷம் கக்கப்பட்டுள்ளது.

சிண்டிகேட்டைச் சேர்ந்த அசோகத்த், ஹாஜி மஹியுத்தீன் ஆகியவர்களுடன் மார்க்சிஸ்ட் கட்சி கொண்டுள்ள தொடர்புகளும் வெளிப்படையானவை. முஸ்லிம் லீகைப் பற்றி அவதூறு பொழிந்து அதனுடைய வேட்பாளர் ஹாரூன்-அல்-ரசீதத்தை மார்க்சிஸ்ட் கட்சி வெளிப்படையாக ஆதரிக்கிறது.

மூன்றே மூன்று இடங்கள்

# மாநிலங்களில் தேர்தல் சூடு பிடிக்கிறது

எம். கே. இராமசாமி
எம்.எஸ்சி.

[தேர்தல் நடைபெறும் மாநிலங்களில் சூடு பிடிக்கத் தொடங்கியுள்ளது. அதிதீவிரமாகப் பிரச்சாரங்கள் நடைபெறுகின்றன. இந்த நிலையில், ஒவ்வொரு மாநிலத்திலும் என்ன நடைபெறுகிறது என்பதைப் பார்க்கவேண்டியது அவசியமாகும். அந்தந்த மாநிலங்களில் போட்டியிடும் பல்வேறு கட்சிகளைச் சேர்ந்த வேட்பாளர்களின் தன்மைகள், பிரச்சாரத்தின் போக்கு, வெற்றி வாய்ப்புகள், கட்சிகளிடையில் ஏற்பட்டுள்ள உறவுகள், முறிவுகள் முதலியவைகளை மாநிலங்கள்வாரியாக இங்கு காண்போம்.]

அதிகமாகக் கிடைக்கிறது என்ற நப்பாசையினால், மார்க்சிஸ்ட்டுகளின் முகாமில் சேர்ந்துள்ளது பார்வார்டு பிளாக் கட்சி. இந்தக் கொள்கையற்ற சந்தர்ப்பவாதப் போக்கினால், அந்தக் கட்சியில் பிளவு ஏற்பட்டுள்ளது. பார்வார்டு பிளாக் ஊழியர்கள் கவுன்சில் என்ற புதிய அமைப்பு ஏற்பட்டுள்ளது. அந்த அமைப்பு ஐந்து இடங்களில் போட்டி வேட்பாளர்களை நிறுத்தி உள்ளது.

மார்க்சிஸ்ட் கட்சியினுடைய பிரச்சார பாணி இந்த முறை

நலன்களைப் பேணுவதற்கான தெளிவான வழிமுறைகளை அது வகுத்துக் காட்டியுள்ளது.

## பீஹார்

விவசாயிகள், தொழிலாளர்களுடைய தீரமிக்க போராட்டங்களினால் வர்க்க உணர்வு

ஏதும் இல்லாத போதிலும், 52 இடங்களில் அது போட்டியிடுவதற்குக் காரணம் இது தான்.

சிண்டிகேட் செயலாளரின் மேற்சொன்ன கூற்றை, இதுவரையிலும் மார்க்சிஸ்ட் கட்சியும்மறுக்கவில்லை, சோஷலிஸ்ட் கட்சியும் மறுக்கவில்லை.

பிற்போக்குக் கும்பலைச் சேர்ந்தகட்சிகள் ஒவ்வொன்றும் பெருமளவு வேட்பாளர்களை நிறுத்தியுள்ளதுகூட ஒருவகைத் தேர்தல் தந்திரமாகும். ஏராளமான வேட்பாளர்களை நிறுத்துவதன்மூலம் முற்போக்கு வாக்குகளைச் சிதறடித்து விடலாம் என்பது அவர்களுடைய எண்ணம்.

பிற்போக்குப் பெருங் கூட்டணியின் தேர்தல் தந்திரங்கள் மூன்று வகையானவை. (1) பிற்போக்கு அணியின் தலைவர்கள் போட்டியிடும் இடங்களில் முழுமையாகத் தொகுதி உடன்பாடு செய்து கொள்வது. (2) முற்போக்கு அணியின் முக்கிய தலைவர்களுடன் நேரடிப் போட்டிக்கு ஏற்பாடு செய்வது. (3) தங்களுக்குள் வாய்ப்பிருப்பவருக்கு உதவிசெய்யும் வகையில்

வதற்காக இவ்வாறு செய்யப்பட்டுள்ளது.

இந்தத் தேர்தல் களத்திலேயே படுதுரோகமான சதிச் செயல்களில் கூசாமல் ஈடுபட்டுள்ள கட்சி மார்க்சிஸ்ட் கட்சியாகும். காங்கிரஸ் கட்சியையும் கம்யூனிஸ்ட் கட்சியையும் கண்மூடித்தனமாக அது எதிர்க்கிறது. அதே வேளையில் பச்சைப் பிற்போக்காளர்களான சிண்டிகேட்டுடனும் ஜனசங்கத்துடனும் கூடிக்குலாவ அது வெட்கப்படுவதில்லை.

அதனுடைய ஒரே நோக்கம் எப்படியாவது கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்கடிக்கவேண்டும் என்பதுதான். இந்த நோக்கத்தோடுதான், தனக்குப் பலமில்லாத போதிலும் அதிக அளவு இடங்களில் மார்க்சிஸ்ட் கட்சி போட்டியிடுகிறது.

மார்க்சிஸ்ட் கட்சியினுடைய

59 இடங்களில் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்கள் நிறுத்தப்பட்டுள்ளனர். 15 இடங்களில் போட்டியிடும் முற்போக்கு சுயேச்சையாளர்களுக்கு அது ஆதரவு தருகிறது.

மாநில மக்களை எதிர்நோக்கும் தீவிரமான பிரச்சினைகளை மையமாகக் கொண்டு, கம்யூனிஸ்ட் கட்சியின் பிரச்சாரம் நடைபெறுகிறது. அதுவும் கோட்பாட்டின் அடிப்படையில் முறையாகச் செய்யப்படுகிறது.

மாநிலத்தின் முக்கியமான பிரச்சினைகளை எடுத்துக்கூறும் தேர்தல் அறிக்கை ஒன்றைக் கம்யூனிஸ்ட் கட்சி வெளியிட்டுள்ளது. மாநிலத்தை ஆளும் காங்கிரஸ் கட்சியின் நிலப்பிரபுத்துவ ஆதரவு நடவடிக்கைகள் அதில் அம்பலப்படுத்தப்பட்டுள்ளன. தொழில் வளர்ச்சி

சிறிது மாறியுள்ளது. "எல்லோரும் என்னை அடிக்கிறார்களே" என்று புலம்பத் தொடங்கியுள்ளது. தனது கட்சி ஊழியர்களை மற்றவர்கள் தாக்குவதாக நாடகமாடி மக்களின் அனுதாபத்தைச் சம்பாதிக்கப் படாதபாடு படுகிறது.

ஆனால், உண்மைகள் வேறு விதமாக உள்ளன. பல மார்க்சிஸ்ட் ஊழியர்கள் ரத்தம் சிந்திக் காயம் அடைந்துள்ளது உண்மைதான். ஆனால் அவர்களுடைய ரத்தம் சிந்தியது எப்படி ?

ஒரே ஒரு எடுத்துக்காட்டைப் பார்த்தாலே உண்மை புரிந்துவிடும். மேமாரி என்ற இடத்தில் இருந்த ஒரு கிடங்கில் வைக்கப்பட்டிருந்த குண்டு வெடித்ததனால் பல மார்க்சிஸ்ட் ஊழியர்கள் படுகாயம் அடைந்தனர். அந்த குண்டுகளைச் செய்து அங்கு சேமித்து வைத்தவர்கள் மார்க்சிஸ்ட்டுகள் தான்.

அந்தக் கிடங்கு யாருடையது தெரியுமா? பினய்கோனார் என்ற மார்க்சிஸ்ட் கட்சி வேட்பாளருடையது அது. மார்க்சிஸ்ட் கட்சியின் பெருந் தலைவர்களில் ஒருவரான திருவாளர் ஹரேகிருஷ்ணக் கோனாரின் சகோதரர்தான் இந்த பினய் கோனார்.

திருடியவனே கூட்டத்தோடு சேர்ந்து " திருடன், திருடன் " என்று கத்தித் தப்பிவிட்டதாக கதை உண்டு. அதே கதையை மேற்கு வங்காளத்தில் நடித்துக்காட்ட விரும்புகிறது மார்க்சிஸ்ட் கட்சி. ஆனால், உண்மை விபரங்கள் அவர்களைக் காட்டிக் கொடுத்துவிடுகின்றன.

சென்ற சில மாதங்களில் கல்கத்தா நகரில் நடைபெற்ற கட்சிச் சண்டைகள் மொத்தம் 206, அந்த 206 சண்டைகளில் 199 நிகழ்ச்சிகளில் பங்கேற்று நடத்திய வில்லன் மார்க்சிஸ்டுக் கட்சி. பிற மாவட்டங்களை எடுத்துக் கொண்டால், சென்ற மே மாதத்தில் இருந்து 569 மோதல்கள் ஏற்பட்டுள்ளன. இவைகளில் 379ஐ நடத்தியவர்கள் மார்க்சிஸ்ட் கட்சியினர்.

மேலும், விளக்கம் எதுவும் தரவேண்டிய அவசியம் இல்லை.

இதே சமயத்தில், மக்கள் நலனுக்கான பதினேழு அம்சங்களைக் கொண்ட வேலைத் திட்டம் ஒன்றைக் காங்கிரஸ்-கம்யூனிஸ்ட் முற்போக்கு ஜனநாயகக் கூட்டணி முன்வைத்துள்ளது. மேற்கு வங்கத்தில உள்ள உழைக்கும் மக்களின்

மேலோங்கி நிற்கும் மாநிலம் பீகார். பிற்போக்கு, வகுப்புவாத சக்திகளை முற்றிலும் முறியடிப்பதற்காக வேண்டி, காங்கிரஸ், கம்யூனிஸ்ட், பிரஜா சோஷலிஸ்ட் ஆகிய கட்சிகள் தமக்குள் உடன்பாடு செய்து கொண்டுள்ளன. இந்த உடன்பாட்டின் விளைவாகத் தமக்குப் பலத்த அடி கிடைக்கப் போகிறது என்பதை உணர்ந்து கொண்ட ஜனசங்கம், சிண்டிகேட் முதலிய பிற்போக்குக் கட்சிகளும் மார்க்சிஸ்ட் கட்சியும் ஓரணியில் நிற்கத் தொடங்கியுள்ளன. முற்போக்குக் கட்சிகளின் வேட்பாளர்களுக்கு எதிராக, பிற கட்சிகள் அனைத்தும் திரண்டுஆதரிக்கும் ஒரே வேட்பாளரைக் கண்டு பிடித்து ஆதரிக்க அவை வேலை செய்கின்றன.

இந்தக் கட்சிகள் தமக்குள்

போட்டி போட்டுக் கொள்ளப் போவதாகத்தான் முதலில் கூறின. ஆனால், வலது பிற்போக்குக் கட்சிகளும் மார்க்சிஸ்ட் கட்சியும் ஓரணியில் திரண்டு நிற்கும் அதிசயக் காட்சியை இப்பொழுது பீகாரில் நாம் காண்கின்றோம்.

சோஷலிஸ்ட் கட்சியும், சிண்டிகேட்டும், மார்க்சிஸ்ட் கட்சியும் தேர்தல் உடன்பாட்டுக்கு (Electoral understanding) வந்துள்ளதாகச் சிண்டிகேட்டின் பொதுச் செயலாளர் எம். ஒப். மிஜா, நிருபர்கள் கூட்டம் ஒன்றில் அறிவித்தார். காங்கிரஸ் பரஸ்பரம் போட்டியிடாத இடங்களில் இந்தக் கட்சிகள் ஒன்றை ஒன்று ஆதரிக்கும்.

இந்த வகையில் 40 இடங்களில் சோஷலிஸ்ட்வேட்பாளர்களைச் சிண்டிகேட் ஆதரிக்கும். மார்க்சிஸ்ட் கட்சி போட்டியிடும் தொகுதிகளில் பெரும்பாலானவற்றில் தாங்கள் போட்டியிடாமல் விட்டு வைப்பது எனச் சிண்டிகேட் முடிவு செய்துள்ளதாக அவ கூறினர். மார்க்சிஸ்ட் தொகுதிகள் சிலவற்றில சிண்டிகேட்டின் நேரடி ஆதரவே அந்தக் கட்சிக்குக் கிடைக்கும் என்றும் சிண்டிகேட்டின் செயலாளர் அறிவித்துள்ளார். மார்க்சிஸ்ட் கட்சிக்கு இந்த மாநிலத்தில் செல்வாக்கு

இடதுசாரி ஜனநாயக வாக்குகளைப் பிளவுபடுத்துவது.

உதாரணத்துக்கு சில தொகுதிகளைக் காணலாம்: சோஷலிஸ்ட் தலைவர் கர்பூரி தாகூர் போட்டியிடும் தாஜ்பூர் தொகுதியில் இதர பிற்போக்குக் கட்சிகள் அனைத்தும் போட்டியிலிருந்து விலகிக் கொண்டன. சிண்டிகேட் தலைவர் கிருஷ்ணகாந்த்சிங்போட்டியிடும் கோரியா கோதியிலும் ஜனசங்கத் தலைவர் ரவீஸ்சந்திர வர்மா போட்டியிடும் மாங்கீர் தொகுதியிலும் இதே கதை தான்.

மார்க்சிஸ்ட் கட்சியும் இந்த உடன்பாட்டில் உள்ளது என்பதற்கு எடுத்துக்காட்டு ஆலம் நகர் தொகுதி பீகார் மாநிலக் காங்கிரஸ் கட்சியின் தலைவர் வித்தியாகர் கவி இந்தத் தொகுதியில் போட்டியிடுகிறார். அவரை எதிர்த்து மார்க்சிஸ்ட், சோஷலிஸ்ட், சிண்டிகேட், ஜனசங்க வேட்பாளர்கள் மனுக் கொடுத்திருந்தனர். இப்பொழுது மார்க்சிஸ்ட் வேட்பாளருக்கு ஆதரவாக, மற்ற பிற்போக்குக் கட்சிகள் அனைத்தும் தமது வேட்பாளர்களை விலக்கிக் கொண்டுவிட்டன.

இடதுசாரி, ஜனநாயக வாக்குகளைப் பிரித்து விடவேண்டும் என்ற நோக்கத்தில் பிற்போக்குக் கட்சிகள் படாதபாடு படுகின்றன. இதற்காக வேண்டி, வகுப்பு, சாதி அடிப்படைகளில் பல வேட்பாளர்களை அவை நிறுத்தியுள்ளன. உதாரணமாக பாட்னா மேற்குத் தொகுதியைப் பார்க்கலாம். கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரான சுனில் முகர்ஜி இங்கு போட்டியிடுகிறார். அவரை எதிர்த்து ஜனசங்கம் தனது வேட்பாளரை நிறுத்தியுள்ளது. இது தவிர, சிண்டிகேட், சோஷலிஸ்ட், மார்க்சிஸ்ட் ஆகிய கட்சிகளும் தமது வேட்பாளர்களை நிறுத்தி வைத்துள்ளன. இந்த மூன்று கட்சிகளுக்கும் இந்தத் தொகுதியில் சிறிதளவு கூடச் செல்வாக்குக் கிடையாது. இருந்தபோதிலும், சாதி அடிப்படையிலும், முஸ்லிம் என்ற அடிப்படையிலும் வாக்குகளைச் சிதறடித்து ஜனசங்கத்தை வெற்றிபெறச் செய்

தேர்தல் பிரச்சாரத்தில் கம்யூனிஸ்ட் கட்சியும், இந்திரா காந்தியும், சோவியத் யூனியனும் தான் பிரதானமாகத் தாக்கப்படுகின்றனர். வலது பிற்போக்கு வகுப்பு வெறியர்கள் ஏகபோகம், அமெரிக்க ஏகாதிபத்தியம் ஆகியவை பற்றி எதுவும் சொல்லப்படுவதில்லை.

முஸ்லிம்களுடைய மத உணர்வுகளைப் பயன்படுத்தி முதல் எடுக்க, ஜனசங்கம், சிண்டிகேட் முதலிய வலது பிற்போக்குக் கட்சிகளும் மார்க்சிஸ்ட் கட்சியும் பெரு முயற்சி செய்கின்றன. ஜமாத்-இ-இஸ்லாமி முதலிய முஸ்லிம் வகுப்புவாத ஸ்தாபனங்களும் இந்தப் பிற்போக்கு சக்திகளுடன் இணைந்து நிற்கின்றன. முஸ்லிம் வாக்காளரிடையில் பெரும் குழப்பம் நிலவுகிறது.

இந்த நச்சுத்தன்மையிலான பிரச்சாரத்தை காங்கிரசும், கம்யூனிஸ்ட் கட்சியும் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியும் நன்கு உணர்ந்துள்ளன. வலது பிற்போக்கு, மார்க்சிஸ்ட் ஆகியவைகளின் பிரச்சாரத்தை முறியடிப்பதற்காக ஒருங்கிணைந்து செயல்பட அவை முடிவு செய்துள்ளன. இதற்கென்று ஒரு குழுவும் போடப்பட்டுள்ளது.

## ஆந்திரா

ஆந்திர மாநிலத்தில் உள்ள காங்கிரஸ் கட்சி, இன்னும் பெரும் நிலப்பிரபுக்களின் கையிலேயே சிக்கிக்கொண்டுள்ளது.

அந்தக் கட்சிக்குள்ளேயே உள்ள முற்போக்குச் சக்திகள் கூடத் தலைதூக்க முடியாமல் அமுத்திவைக்கப்பட்டுள்ளன. இந்த நிலையில், இடதுசாரி ஜனநாயக சக்திகள், காங்கிரசை எதிர்த்து முறியடிக்க வேண்டிய நிலைமை அங்கு ஏற்பட்டுள்ளது. எனவே, தனியாகக் கட்சி அடிப்படையில் வேட்பாளர்களை நிறுத்தி வைத்துள்ளது கம்யூனிஸ்ட் கட்சி.

ஆந்திரச் சட்டமன்றத்துக்கு

யில் ஆந்திரம் பின்தங்கிக் கிடப்பதும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

பயங்கரமான பல ஊழல்கள் ஆந்திர மாநிலத்தில் நடைபெற்றுள்ளன. உரம் அனுப்பி வைப்பதில் 3 கோடி ரூபாய் ஊழல். அரிசி ஏற்றுமதி ஊழல். ஆந்திரப் பிரதேச நல நிதிக்கான லாட்டரி ஊழல் இப்படி வரிசையாக வரும் ஊழல்களால், காங்கிரஸ் கட்சியும்அதன் தலைவர்களும் ஏராளமாகக் கொள்ளையடித்துள்ளனர். இவைகளை மக்கள் முன்பு எடுத்து வைத்து அம்பலப்படுத்தியுள்ளது கம்யூனிஸ்ட் கட்சி.

பிரதம மந்திரி இந்திராகாந்தி தேர்தல் பிரச்சாரம் செய்வதற்காக ஏற்கனவே இரண்டு தடவைகள் ஆந்திரப் பிரதேசத்துக்கு வந்து சென்றுவிட்டார். "ஸ்திரமான அரசாங்கம்" அமையவேண்டும் என்ற ஒன்றுதான் அவருடைய பேச்சுக்களின் பிரதான அம்சமாக இருந்தது ஆந்திராவில் உள்ள காங்கிரஸ் தலைவர்களும் அதையே கிளிப்பிள்ளைகள் போல் திரும்பத் திரும்பச் சொல்லி வருகின்றனர்.

ஆனால், பல ஆண்டுகளாக நிலையான அரசாங்கத்தைப் பெற்றிருந்திருக்கும் ஆந்திர மாநிலத்தில் அது எடுபடவில்லை. மக்களுடைய கவனத்தை அந்த முழக்கம் கவரவே இல்லை.

மாநிலத்தின் அரசியல் வாழ்க்கையில் இடதுசாரிப் போக்கிலான மாற்றத்தைக் கொண்டு வரவேண்டும். இதற்கு ஒரு வலுவான ஜனநாயக எதிர்க்கட்சி மிகவும் தேவையாகும். இதுதான் கம்யூனிஸ்ட் கட்சி, ஆந்திர மாநில வாக்காளர்களிடையில் வைத்துள்ள பிரதான முழக்கம். இதற்கு மக்களுடைய வலுவான ஆதரவு கிடைத்து வருகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியின் தேர்தல் கூட்டங்களில் பெருந்திரளான மக்கள் ஆர்வமுடன் கூடுவதே இதற்கு எடுத்துக்காட்டாக உள்ளது. விஜயவாடா, ராஜமகேந்திரபுரம், எலூரு, குண்டூர், ஓங்கோல், தேவர் கொண்டா மற்றும் பல்வேறு இடங்களில் கம்யூனிஸ்ட் கட்சியின் மாபெரும் மக்கள் அணி வகுப்புகள் நடைபெற்றுள்ளன. மாநிலம் முழுமையிலும் அவை நடைபெற்று வருகின்றன.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்களான தோழர்

10-ம் பக்கம் பார்க்க.

# போராட்டத்தைச் சீர்குலைக்க எண்ணாதீர்!

## ஆட்சியாளர்களுக்கு கம்யூனிஸ்ட்டு கட்சியின் கோவை மாவட்டக் குழு எச்சரிக்கை

கோவை மாவட்டப் பஞ்சாலைத் தொழிலாளர்களின் தீரமிக்க போராட்டத்துக்கு முழுமனதான ஆதரவைத் தெரிவித்து இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கோயமுத்தூர் மாவட்டக்குழு சார்பில் தோழர் பி. நாராயணன் பின்வரும் அறிக்கையை வெளியிட்டுள்ளார்:

கோவை மாவட்டத்திலுள்ள 60 ஆயிரம் பஞ்சாலைத் தொழிலாளர்கள் 12-2-72ந் தேதி முதல் முன்னென்றும் கண்டிராத அளவுக்கு மிகுந்த ஒற்றுமையுடன் தீவிரமாக தங்கள் கோரிக்கைகளை வலியுறுத்தி போராடி வருகின்றனர். அவர்கள் முன்வைத்துள்ள 19 கோரிக்கைகளும் மிகவும் பிரதானமானவைகளாகும்.

மூடிய மில்களை திறப்பது. போனஸ் அடிப்படைகளை நிர்ணயிப்பது, கிராஜுவிட்டியை வரையறுப்பது போன்ற விஷயங்கள் மத்திய, மாநில அரசுகள் செய்யவேண்டியவையாகும்.

—சம்பளம், பஞ்சப்படி உயர்வு, டெம்பரர், பதிலித் தொழிலாளர் பிரச்சினை, பெண் தொழிலாளர்களின் வேலைப் பாதுகாப்பு, ஆகிய பிரச்சினைகள் முதலாளிகளால் உடனடியாக தீர்க்கப்படவேண்டிய விஷயங்களாகும்.

இதில் மாநில சர்க்கார் எதற்கெடுத்தாலும் மத்திய சர்க்காரையே கையைக் காட்டுவதும், மத்திய சர்க்கார் மெத்தனமாக இருப்பதும் மிகவும் கண்டிக்கத்தக்கது. குறிப்பாக மாநில அரசு தொழிலாளர்களுக்கு சாதகமாக நின்று மில் முதலாளிகள் நிறைவேற்ற வேண்டிய தொழிலாளரது கோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்ற தனது அதிகாரங்களை வைத்து நிர்ப்பந்திப்பதற்கு பதிலாக, முதலாளிகளுக்கு சாதகமாக இருப்பதுதான் பிரச்சினையை சிக்கலாக்கியுள்ளது.

தொழிலாளர்கள் தங்களது அடிப்படையான கோரிக்கைகளை திரு. அண்ணாத்துரை அவர்கள் முதல்வராக இருந்த காலத்திலிருந்தேதீவிரமாக வலியுறுத்தி வருகின்றனர். 1971 ஜுலையில் தொழிலாளர்கள் போராடியபோது தமிழக அரசு இரண்டுமாத தவணை கேட்டது. ஆனால், அதற்குப்பின் பல மாதங்களாகியும் தொழிலாளர்களது கோரிக்கைகள் கவனிக்கப்படவே இல்லை.

அதுபற்றி பல மாதங்களாக அரசினருக்கும், முதலாளிகளுக்கும் தெரிவித்தும் எவ்வித பயனும் விளையவில்லை. நீண்ட பொறுமைக்குப் பிறகு போராட்டம் வெடித்துள்ளது. சங்க வித்தியாசமின்றி தொழிலாளி வர்க்கம் இன்று பேரணி திரண்டுள்ளது.

பிப்ரவரி 12ந் தேதி வேலை நிறுத்தம் நடைபெறும் என்று தொழிலாளர்கள் அறிவித்த பிறகு, வேலை நிறுத்தத்திற்கு மூன்று நாட்கள் இருக்கும் போது, முத்தரப்பு பேச்சு வார்த்தைகளுக்கு அரசு அழைப்புவிட்டது.

பேச்சு வார்த்தையில் தொழிலாளரது 19 கோரிக்கைகளில் 3 லட்சம் ரூபாய் நிவாரணம், மூன்று மில்களை அரசு எடுத்து நடத்துவது என்று கூறப்பட்டதைத் தவிர, மற்ற பிரச்சினைகளில் முதலாளிகளால் செய்யப்படவேண்டிய எந்த பிரச்சினைக்கும் தீர்வு காணப்படவில்லை. எல்லாம் இரண்டு கமிட்டிகள் போட்டு பரிசீலிக்கப்படும் என்பதைத் தவிர அரசிடமிருந்தும், முதலாளிகளிடமிருந்தும் எவ்வித உத்திரவாதமும் கிடைக்கவில்லை. அவ்வாறிருக்க, 17 கோரிக்கைகளை அமுலாக்க தமிழக அரசு ஒப்புக்கொண்டுவிட்டதாக முதலமைச்சரின் அறிவிப்பு பத்திரிகைகளில் வந்துள்ளது. ஆனால், எந்த 17 பிரச்சினைகள் என்பதோ, அந்த 17 பிரச்சினைகள் எவ்வாறு முடிக்கப்பட்டன என்பதோபற்றி எவ்வித விபரமும் இல்லை.

மேலும் தமிழக அரசு வடநாட்டு முதலாளிகளிடமிருந்து தென்னாட்டு முதலாளிகளைப் பாதுகாக்கும் பாதுகாவலனாக இருப்பதுபோன்று பேசிவருகின்றனர். ஆளுங்கட்சியின் பேச்சாளர்கள் அரசைக் கவிழ்க்க நடக்கும் போராட்டம் என்று கூறி, முதலாளிகளுக்கு பாதுகாப்பாகப் பிரச்சாரம் செய்து வருகின்றனர். கூட்டுப் போராட்டக் கமிட்டியிலிருந்துவந்த திமுக தொழிற்சங்கத்தினர், மறியல் போராட்டத்திலிருந்து விலகி நிற்கின்றனர். ஆனால், பனியன் தொழிலாளர்கள் போராட்டத்தில் ஸ்டிரைக்கில் மட்டுமின்றி, மறியலிலும் ஈடுபட்டு வருகின்றனர். இவ்வாறு இருக்க, பஞ்சாலைத் தொழிலாளர்களின் வேலைநிறுத்த,மற்றும் மறியல் போராட்டத்தினை ஆட்சியைக் கவிழ்க்கும் போராட்டம் என்று சித்தரிப்பது சரியா, டெல்லியைக்காட்டியும், கவிழ்க்கும் சதி என்று கூறியும், முதலாளிகளை நிர்ப்பந்திக்காமலும் இருந்து வந்தால், உழைக்கும் மக்கள் தொழிலாளர்கள் அரசு என்பதை நம்புவார்களா?

கட்சிகளையும், தொழிற்சங்கங்களையும் குறைகூறி போராட்டத்தை சீர்குலைக்கலாம் என்று நினைத்து ஏமாற வேண்டாம். இப்போதும், இப் பிரச்சினை தீருவதற்கு வழியுள்ளது. திமுக அரசு முதலாளிகளின் பிரதிநிதியாக இருப்பதிலிருந்து, பல்லாயிரக்கணக்கான உழைக்கும் தொழிலாளர்களின் பக்கம் பாதுகாவலனாக மாறினால், பிரச்சினை உடனடியாக தீருவதற்கான வாய்ப்பு உள்ளது. அதனை உடனடியாக செய்யவேண்டுமென தமிழக அரசினரை வற்புறுத்துகிறோம்.

தொடர்ந்து உறுதியுடன் போராடிவரும் தொழிலாளர்களுக்கு மாவட்டக்குழு தனது வாழ்த்துதல்களை தெரிவித்துக் கொள்கிறது.

# ஐயர்பாடி தோட்டத் தொழிலாளர் வேலை நிறுத்தம் ஜனவரி 25 முதல் நீடிக்கிறது

வால்பாறை—ஐயர்பாடி எஸ்டேட்டில் நிர்வாகம் குறிப்பிட்ட அளவு வேலை செய்யவில்லை என்ற காரணம் காட்டி 28 தோட்ட வேலைத் தொழிலாளர்களை. சமரச நடவடிக்கை அதிகாரிகளால் மேற்கொள்ளப்பட்டிருக்கும்போது, வேலை நிறுத்தம் செய்ததை ஆட்சேபித்தும். 130 தொழிலாளர்கள் ஒருநாள் வேலைக்குப் போகாததற்கு 8 நாள் சம்பள வெட்டு செய்ததை எதிர்த்தும் ஜனவரி 25 லிருந்து, சகல தொழிலாளர்களும் வால்பாரை தமிழ்நாடு தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் வேண்டுகோளின்படி வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

19—2—72லிருந்து சாத்வீக மறியல் நடந்து நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் சங்கப் பொதுச்செயலாளர் தயாரத்தினம் தலைமையில் கைதாகி விடுதலையாகியுள்ளனர்.

ஆர். டி. ஓ. வேண்டுகோளை மதித்து மறியல் ஒத்திவைக்கப்பட்டுள்ளது. வேலை நிறுத்தம் தொடர்கிறது. மாவட்டக் கலெக்டர் 24—2—72ல் சமரசம் செய்வதாகக் கூறியுள்ளார்.

தமிழக அரசு உடனடியாகத் தலையிட்டு நீதி வழங்கவேண்டும்.

ஏ. எம். கோபு
செயலாளர்
தமிழ்நாடு ஏ.ஐ.டி.யூ.சி.

# ஐயர்பாடி எஸ்டேட் தொழிலாளர் போராட்டம்

## கம்யூனிஸ்ட் கட்சி கோவை மாவட்டக்குழு அறிக்கை

வால்பாறை ஐயர்பாடி எஸ்டேட் நிர்வாகத்தின் காட்டுமிராண்டித்தனத்தை எதிர்த்து 400 தொழிலாளர்கள் கடந்த முப்பது நாட்களாக போராடி வருகின்றனர்.

28 தொழிலாளர்களைக் காரணமின்றி டிஸ்மிஸ் செய்துள்ளதையும், 15நாள் சம்பளம் பிடித்ததையும் எதிர்த்து நியாயத்திற்காக உரிமைப்போர் நடத்தி வருகின்றனர்.

30 நாட்களாக நடைபெற்று வரும் இந்தப் போராட்டத்தை லேபர் டிபார்ட்மெண்ட் தலையிட்டு நியாயமான தீர்வுகாண ஆக்கபூர்வமான எந்த நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. இதனால் எஸ்டேட் முதலாளி தன்னிஷ்டம்போல் எதையும் செய்யலாம் என்று ஊக்கமளித்து வருகின்றனர். தொழிலாளர் துறையின் இப்போக்கினை கம்யூனிஸ்ட் கட்சி மிக வன்மையாகக் கண்டிக்கிறது.

எனவே சம்பந்தப்பட்ட அதிகாரிகளும்,அரசும் உடனடியாக தலையிட்டு தொழிலாளர் கோரிக்கையை நிறைவேற்ற வலியுறுத்துகிறோம்.

# உயர்நிலைப்பள்ளியில் ஊழல் உப்பிவிட்டது

சென்னை எழும்பூர் உயர்நிலைப்பள்ளியில் சுகாதாரவசதி, நீர்வசதி. நாற்காலி-பெஞ்சு வசதிகள் இல்லை. சில ஆண்டுகளுக்கு முன்னர் சுமார் 1000 மாணவர்கள் படித்துக் கொண்டிருந்த பள்ளிக்கூடத்தில் இப்பொழுது 350 மாணவர்கள் மட்டுமே கற்கிறார்கள். ஒரு பகுதியை வாடகைக்கு தனியாருக்கு விட்டதால் அனைத்து மாணவர்களும் படிக்க வசதியின்றி திண்டாடுகிறார்கள். எழும்பூர் உயர்நிலைப்பள்ளியில் இருந்த ஒரு ஆசிரியரையும் அநியாயமாக நீக்கிவிட்டார்கள். நீதிமன்றம் வேலை கொடுக்க உத்தரவிட்டது. 11000 ரூபாயும் கொடுக்க வேண்டும் என்று தீர்ப்புக் கூறியது. அதையும் தரவில்லை. அரசிடமும் இருந்து பெற்ற உதவித் தொகைகளை பள்ளி நிர்வாகத்தினர் விழுங்கி ஏப்பம் விட்டு விட்டனர்.

பள்ளிக்கூடக் கட்டிடத்தை விலைபேசிக் கொண்டிருக்கிறார்கள். அதை வைத்து ஊழல்களையும் மறைத்து நல்ல விலைக்கு விற்று லாபம் அடையும் நோக்குடன் அரசிடமிருந்து வாடகையாகப் பணம் கேட்கிறது பள்ளி நிர்வாகம். அரசு வாடகைப் பணம் தரமறுத்தால் பள்ளிக்கூடத்தை மூடப்போவதாக நிர்வாகத்தினர் அறிவித்துள்ளனர்.

இதனால் 21 ஆசிரியர்கள், 350 மாணவர்களின் எதிர்காலம் மிகமிகக் கவலைக்கிடமாக உள்ளது.

தலைமையாசிரியர் என்ன செய்வதென்று தெரியாமல் இருதலைக்கொள்ளி எறும்பாய் தவிக்கிறார். இதுகுறித்து மாண்புமிகு முதலமைச்சர், கல்வியமைச்சர், ஆகியவர்களுக்கு ரிஜிஸ்தர் தபால்மூலம் பள்ளியை அரசே ஏற்றுநடத்த வேண்டும் என விண்ணப்பித்தும் எவ்வித பதிலும் வரவில்லை, 23-2-72 அன்று ஊர்வலமாக கோட்டைக்குச் சென்று அமைச்சர் மாதவனைச் சந்தித்து விஷயத்தை விளக்கினார்கள்.

அமைச்சர் இன்னும் ஒரு வாரத்தில் ஏற்பாடு செய்வதாகக் கூறினார். அமைச்சர் கூறியவற்றில் மாணவர்களுக்கு நம்பிக்கையில்லை. ஏற்கனவே கல்வி அமைச்சரிடம் தெரிவித்திருந்தும் ஏதும் செய்யவில்லை. கல்வி நிலையத்தின் தாளாளர் (Correspondant) கல்விஅமைச்சக அலுவலகத்தில் ஒரு ஆபீசராக இருந்தும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை. கல்வி அமைச்சரின் தனி அலுவர் திரு பண்டரிநாதனைச் சந்தித்து முறையிட்ட போதும் அவமானப்படுத்துகிற பதிலைத் தவிர வேறு எதுவும் வரவில்லை. இந்தச் செய்தியை அனைத்திந்திய மாணவர் பெருமன்றத்தின் சென்னை மாவட்டக்குழுத் தலைவர் ந. க. நடராசன் அவர்களிடம் தெரிவித்தனர்.

அரசு வாக்களித்தபடி வருகிற 3-3-72க்குள் கோரிக்கையை நிறைவேற்றிவைக்க முன்வராவிட்டால் மாணவர்களும், ஆசிரியர்களும் பள்ளியை அரசு ஏற்று நடத்த வேண்டும் எனக் கேட்டு கிளர்ச்சி நடத்துவார்கள் என அனைத்திந்திய மாணவர் பெருமன்றத்தின் சென்னை மாவட்டக்குழுத் தலைவர் ந. க. நடராசன், செயலாளர் மா. கணேசன் ஆகியோர் அறிவித்துள்ளனர்.

9ம் பக்கத் தொடர்ச்சி ]

# [ மாநிலங்களில் . . .

கள் சி. ராஜேஸ்வரராவ், பூபேஷ் குப்தா, என் கே. கிருஷ்ணன், இஸட். ஏ. அகமது, சி. கே. சந்திரப்பன் முதலியோர் ஆந்திர மாநிலத்தில் தேர்தல் பயணம் செய்து வருகின்றனர். தோழர் எஸ். ஏ. டாங்கே விரைவில் சுற்றுப் பயணம் மேற்கொள்ள உள்ளார்.

இந்திரா காந்தியின் உருத் தோற்றத்தை வைத்துமட்டுமே வெற்றி கண்டுவிடலாம் எனக் காங்கிரசார் கனவு காண்கின்றனர் இந்த எண்ணத்தினால், காங்கிரசுக்குள் போட்டிக்காங்கிரஸ் வேட்பாளர்கள் யாரும் தேர்தலில் போட்டியிடமாட்டார்கள் என அவர்கள் நினைத்தனர்.

ஆனால், 150க்கு மேற்பட்ட போட்டிக் காங்கிரசார், கட்சிக் கட்டளையை மீறிச் சுயேச்சைகளாகப் போட்டியிடுகின்றனர். இவர்களில் பல முன்னாள் அமைச்சர்களும் பெருந்தலைவர்களும் உண்டு. இந்த "உட்பகை"யைக் கண்டு காங்கிரஸ் வட்டாரங்கள் கதிகலங்கி நிற்கின்றன.

இதர கட்சிகளை எடுத்துக் கொண்டால், மார்க்சிஸ்ட் கட்சி 84 இடங்களில் தனது வேட்பாளர்களை நிறுத்தி உள்ளது. மற்ற மாநிலங்களைப் போலவே, இங்கும் கம்யூனிஸ்ட் கட்சியைத் தோற்கடிப்பதுதான் அதனுடைய தலையாய நோக்கம். "உண்மை" எதிர்க்கட்சி வேண்டும் என்று அது அலறுவதை யாரும் பொருட்படுத்துவதாகக் காணோம்.

1967 தேர்தல்களில், மார்க்சிஸ்ட் கட்சியைவிடக் கம்யூனிஸ்ட் கட்சி அதிக வாக்குகள் பெற்ற மங்களாகிரி, ராஜமகேந்திரபுரம், ஏரியால், இந்துருத்தி முதலிய இடங்களில் எல்லாம் கூட. இந்தத் தேர்தலிலும் மார்க்சிஸ்ட் கட்சி தனது வேட்பாளர்களை நிறுத்தியுள்ளது. கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களைத் தோற்கடிக்க, ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு இது மிகவும் உதவியாக இருக்கும்.

ஆந்திர மாநிலத்தில் இந்தப் "புரட்சிகரக்" கைங்கரியத்தில் ஈடுபட்டுள்ளது மார்க்சிஸ்ட் கட்சி.

மார்க்சிஸ்ட் கட்சியின் போக்கில் மனம் சலித்த பல ஊழியர்களும் தலைவர்களும் அதை விட்டு விலகி வந்தவண்ணம் உள்ளனர். 1967-க்குப் பிறகு அந்தக் கட்சியில் ஏற்பட்ட பிளவு அனைவரும் அறிந்த ஒன்றாகும்.

தற்போதைய சட்டமன்ற உறுப்பினர்களான முகமது ரஜாப் அலி, பி. சன்யாசிராவ் ஆகிய இருவரும் 1967 தேர்தல்களில் மார்க்சிஸ்ட் கட்சியின் சார்பில் போட்டியிட்டு வெற்றி கண்டனர். அவர்கள் இருவரும் இப்பொழுது கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவு பெற்ற சுயேச்சையாளர்களாகப் போட்டியிடுகின்றனர். யு. மல்சூர் என்ற இன்னொரு சட்டமன்ற உறுப்பினரும் கம்யூனிஸ்ட் ஆதரவு சுயேச்சையாகப் போட்டியிடுகிறார். பிரபல தலைவரான டி. வேத்தராஜுவுக்கும் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவு நல்கியுள்ளது.

எனவே, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், இந்தச் சுயேச்சைகளுக்கும் எதிராக மார்க்சிஸ்ட்கட்சி கொண்டுள்ள கேவலம் வெறிநிலையை எட்டியுள்ளது.

ஆந்திர மாநிலத்தைப் பொறுத்தமட்டிலும் இதர கட்சிகள் எதுவும் குறிப்பிடத்தக்கவையாக இல்லை. சிண்டிகேட்டும், ஜனசங்கமும் பெயரளவில் மட்டுமே போட்டியிடுகின்றன. மற்ற கட்சிகளைப் பற்றி சொல்வதற்கு ஏதும் இல்லை.

அமைய இருக்கும் ஆந்திரச் சட்டமன்றத்தில் பிரதான எதிர்க்கட்சியாகக் கம்யூனிஸ்ட் கட்சி அமைவதற்கான வாய்ப்புக்கள் பிரகாசமாக உள்ளன என்பது உறுதியாகத் தெரிகிறது.

# ஆதித்தன் கல்வி கட்டளை நிலங்கள் விற்பனை:

# உச்ச வரம்பு சட்டம் மிச்ச நிலம் உண்டா?

தமிழ் நாட்டில் எரிந்த கட்சி எரியாத கட்சி விவாத அரங்கு நடைபெற்று வருகிறது. மக்களை 'லாவணி'யை ரசிப்பவர்களாக நினைத்து அரசியல் நடத்தப் பார்ப்பது தவறாகும்.

முன்னைய ஆட்சிகளின் தவறுகளை மக்கள் அவ்வளவு சீக்கிரத்தில் மறந்துவிட மாட்டார்கள்.

இன்றைய ஆட்சியாளர்களின் தீய போக்குகளையும் மக்கள் சகித்துக்கொண்டிருக்க மாட்டார்கள்.

மக்கள் எதையும் மறந்துவிடுபவர்கள் அல்ல. காலம் தெரிந்து காலைவாரி விட்டுவிடுவார்கள். மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பாக இருந்து வருகிறது.

மக்களை மறந்து தலைவர்கள் பேசி வருகிறார்கள்.

திமுக ஆட்சியில் ஊழல் இருப்பதாகக் காமராஜர் கூறி வருகிறார். ஊழலை எதிர்க்க அனைவரும் ஒன்று சேரவேண்டும் என்று அழைப்பு விடுகிறார்.

காமராஜரின் அறைகூவலுக்குப் பதிலடியாக "காமராஜர் ஆட்சியில்' ஊழல் இல்லையா என்று பட்டியல்களை விரிக்கத் தயாரென்று கருணாநிதி கூறுகிறார்.

### காங்கிரஸ் ஆட்சியில்

காங்கிரஸ் ஆட்சியில் நிறைவேற்றப்பட்ட நிலச்சீர்திருத்தம் அமுலாகிய முறைகளைப் பற்றி விமர்சிக்கிறார்.

"1960-ம் ஆண்டு உச்ச வரம்புச் சட்டம் வந்தபோது காங்கிரஸ் அரசாங்கம் முப்பது ஸ்டாண்டர்டு ஏக்கராவுக்கு மேல் யாரும் வைத்துக்கொள்ளக்கூடாது. அதுதான் உச்ச வரம்பு என்றார்கள். ஆனால் இவ்வளவு பெரிய நிலச்சீர்திருத்தத்தை வரப்போகிறது வரப்போகிறது என்று அறிவித்தது பெரிய குற்றம். பத்தாண்டுகாலமாகச் சொன்னார்கள்.

உச்சவரம்பு வந்தது அறுபதாம் ஆண்டு. அதற்கு முன்பு யார் யார் இடத்திலே எத்தனை ஏக்கர் நிலம் இருந்தது? அவர்களெல்லாம் உச்சவரம்புச் சட்டம் வருவதற்கு முன்பு இந்தச் சர்க்காரை எவ்வளவு ஏமாற்றினார்கள் என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

தஞ்சை பூண்டி வாண்டையார் குடும்பம் ஸ்தாபனக் காங்கிரஸ் கட்சிக்கு அரண். இவருடைய குடும்பத்துக்கு 497 ஏக்கரா நிலம். 30 ஸ்டாண்டர்டு ஏக்கரா போக மிச்சம் 300க்கு மேற்பட்ட ஸ்டாண்டர்டு ஏக்கரா சர்க்காருக்கு உரிய நிலமாக வந்திருக்க வேண்டும்! எவ்வளவு வந்தது தெரியுமா? எதுவுமே வரவில்லை.

கருப்பையா மூப்பனார் தஞ்சை மாவட்டத்தில் காங்கிரஸ் கட்சியினுடைய தலைவர். 1959வரை இரண்டாயிரத்து இருபத்தெட்டு ஏக்கரா. அறுபதாம் ஆண்டில் அவருக்கு எவ்வளவு தெரியுமா? முப்பத்தைந்து ஏக்கரா? சர்க்காருக்கு கிடைத்தது

**ஆர் நல்லகண்ணு**

நான்கு ஸ்டாண்டர்டு ஏக்கர் தான்.

இதற்கு காமராஜர் சூட்டுகிற நாமம் என்ன?''

என்று முதல்வர் கேட்கிறார்.

சிண்டிகேட் காங்கிரஸ் தலைவர் காமராஜரை திமுக தலைவரும் முதலமைச்சருமான கருணாநிதி கேட்டிருக்கும் கேள்வி சரியானதே!

இக்கேள்விகளை 12 ஆண்டுகளுக்கு முன்பு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும், தமிழ்நாடு விவசாயிகள் சங்கமும் காமராஜரைக் கேட்டது. காங்கிரசின் நிலச்சீர்திருத்தத்தினால் மிச்ச நிலம் கிடைக்காது. "தங்கமா? பித்தளையா?'' என்ற தலைப்பில் பிரசுரம் வெளியிட்டு அம்பலப்படுத்தியது.

தலைவர்கள் சீனிவாசராவ், மணலிகந்தசாமி இருவரின் தலைமையில் மாபெரும் போராட்டம் நடைபெற்றது. 16 ஆயிரம் பேர் சிறை சென்றார்கள்.

### திமுக ஆட்சியில்

காங்கிரஸ் அரசு நிறைவேற்றிய சட்டத்தைப் போலவே தி. மு. க. அரசும் நிலச்சீர்திருத்தச் சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறது. 30 ஏக்கர் என்றிருந்ததை 15 ஏக்கர் என்று திருத்தியது. இருப்பினும் மிச்ச நிலம் கிடைக்க வழியில்லை.

திமுக அரசு நிறைவேற்றியுள்ள உச்சவரம்புக் குறைப்புச் சட்டத்தைப் பரிசீலிப்போம்.

திமுக அரசின் உச்சவரம்புக் குறைப்புச் சட்டம் 1970-ல் காந்தி ஜெயந்தி அன்று அமுலாகும் தேதி பற்றிய அறிவிப்பில் மட்டுமே உள் நுழைந்து பார்த்தால் பெரும் மோசடி உள்ளடங்கி இருப்பது அம்பலமாகும்.

திமுக அரசின் சட்டத் திருத்தத்தில் 21-ஏ பிரிவே—உபரி நிலம் கிடைக்காமல் செய்கிறது. நில முதலாளிகள், பண்ணையார்கள் பங்கு பாகப் பிரிவினைகளைச் செய்துகொள்ளத் தூண்டுகிறது. மருத்துவமனை கல்வி நிறுவனங்களை பெயரளவுக்கு உருவாக்கி, நிலங்களை அவைகளின் பெயருக்கு எழுதி வைக்க வசதி ஏற்படுத்திக் கொடுக்கிறது. அதற்குத் தகுந்த போதுமான கால அவகாசமும் சட்டரீதியாகவே கொடுக்கிறது.

நில உச்சவரம்புச் சட்டத்தில் இத்திருத்தம் ஒன்றே திமுக அரசு விவசாயிகளை வஞ்சித்து நிலப்பிரபுக்களுக்கு மறைமுகமாக ஆதரவு கொடுக்கிறது என்பது புலனாகும்.

இத்திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியும், அறிவிக்கப்பட்ட தேதியும் குறிப்பிடத்தக்கன; மிகவும் உன்னிப்பாக கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டியதாகும்.

● தொடக்கத் தேதி (Date of The Commencement of This Act என்பது 1970 பிப்ரவரி 26ம் நாள்.

● "அறிவிக்கப்பட்ட தேதி என்பது (Notifi d date) ஓர் அறிவிப்பு மூலம் அரசால் குறிப்பிடக்கூடிய தேதி என்று பொருள்படும். இச் சட்டம் வெளியான தேதிக்குப்பிறகு உள்ள ஒரு தேதியாக அது இருக்கவேண்டும்''

(இது திருத்தச் சட்டத்திலுள்ளதாகும்.)

● 26—2—1970 நில உச்சவரம்பு திருத்தச் சட்டத்தின் தொடக்கத் தேதியாகும்.

● 20-6-1970ல் இச் சட்டத்திற்கு குடியரசுத் தலைவர் ஜனாதிபதி கிரி அங்கீகாரம் கொடுத்தார்.

● 23-6-1970—நில உச்சவரம்பு (குறைப்பு) திருத்தச் சட்டம் குடியரசுத் தலைவர் அங்கீகாரம் பெற்றதும் தமிழ்நாடு அரசிதழில் (கெஜட்டில்) பிரசுரிக்கப்படுகிறது. இது தான் சட்டம் பிரசுரமான தேதி.

● 2-10-1970— அக்டோபர் 2ந் தேதிதான் அறிவிக்கப்பட்ட தேதியாகும். இத் தேதியிலிருந்துதான் நில உச்சவரம்புத் திருத்தச் சட்டம் அமுலாக்கப்படுகிறது.

நல்ல நாள் பார்த்து சட்டம் அமுலாகியது. சட்டம் அமுலாக்கப்போகிற தேதியும் சேதியும் செப்டம்பர் 29ந் தேதி தினப் பத்திரிகைகளில் வந்துவிட்டன. சேதியோடு மட்டுமல்ல. அக்டோபர் 2ம் தேதிக்குள் மக்களுக்கும் பேரப் பிள்ளைகளுக்கும் பற்று—பாசத்தோடு நிலங்களைப் பிரித்துப் பத்திரம் எழுதிக்கொள்ளலாம். மருத்துவமனை, கல்வி நிறுவனங்களுக்கு எழுதி வைக்கலாம் என்ற சட்ட விதிகளை நினைவு படுத்திச் செய்திகளும் வெளி வந்தன.

சட்டமன்றத்தில் திருத்த மசோதா விவாதம் நடந்துகொண்டிருந்த காலத்தில் 2 ரூபாய் மதிப்புள்ள ஒப்பந்தப் பத்திரம் கிடைக்காமல் கிராக்கி இருந்ததை அமைச்சர்கள் அறிவார்கள்.

ஜனாதிபதி அங்கீகரித்த 20-6-70லிருந்து சில நாட்களில் அமுலாக்கியிருக்கலாம். 104 நாட்கள்—மூன்று மாதங்களுக்கு மேலும் நீடித்திருக்க வேண்டியதில்லை.

### கேரளாவில்...

நிலப்பிரபுக்களுக்குப் பிடி கொடுக்காது உழுபவனுக்கு நிலத்தை— உரிமையாக்கும் கேரள நிலச்சீர்திருத்தச் சட்டத்திற்கு குடியரசுத் தலைவர் கிரி 1969 டிசம்பர் 16-ல் கையெழுத்திட்டார்கள். சட்டமன்றத்தில் திருத்தச் சட்டம் நிறைவேறியவுடன் ஜனாதிபதி கையெழுத்திட்ட உடனே பெறவும், அச்சுதமேனன் தலைமையில் கேரள அமைச்சர்கள் முயற்சி எடுத்தார்கள். 15 நாட்களில் 1970 ஜனவரி முதல் தேதியிலிருந்து சட்டம் அமுலாகும் என்றும், சட்டத்தின் தொடக்கத் தேதியிலிருந்து பின் தேதியிட்டே அமுலாகுமென்றும் அறிவிக்கப்பட்டது. நிலப்பிரபுக்கள் யாரும் தப்பிக்க முடியவில்லை. கேரள நிலச்சீர்திருத்தச் சட்டம் நாட்டுக்கே வழிகாட்டியாக விளங்குகிறது.

### தோல்வி

காங்கிரஸ் ஆட்சியிலும் எதிர் பார்க்கப்பட்ட மிச்ச நிலம்



கிடைக்கவில்லை. திமுக அரசின் சட்டத்திலும் உபரி நிலம் கிடைக்கவில்லை.

காங்கிரஸ் சட்டத்தைப் போலவே மலைப் பிரதேசங்கள், தேயிலைத் தோட்டங்கள், தொழிற்சாலைகள், தோட்டக்காடுகள், கோயில் மடங்கள் ஆகியவைகளின் சொத்துக்களுக்கு உச்சவரம்பிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டது.

இவ் விதிவிலக்குகளால் உச்சவரம்புச் சட்டம் வெறும் கண்துடைப்பாக மாறியது. விவசாயிகள் சங்கக் கிளர்ச்சிக்குப் பின்புதான் கரும்பு மேய்ச்சல் நிலங்களுக்கு விதிவிலக்கு ரத்து செய்யப்பட்டது.

### இதோ! ஆதாரம்

திமுக அரசின் சட்டத்திலுள்ள குறைபாடுகளைப் பயன்படுத்தி நிலப்பிரபுக்கள் எவ்வாறு நிலங்களைப் பிரித்துப் பட்டாப் போட்டுக்கொண்டார்கள் என்பதற்கு ஏராளமான விவரங்களை அதிகாரப்பூர்வமான அத்தாட்சிகளோடு நிரூபிக்க முடியும்.

1. தஞ்சை மாவட்டத்தில் உள்ள நிலப்பிரபுக்களில் செல்வாக்குள்ளவர் வி. எஸ். டி. தியாகராஜ முதலியார், நில புலன்களும், தொழிலும் அத்தோடு அரசியல் செல்வாக்கும் அதிகம் உள்ளவர். இவரை திமுக முதல்வரும், தமிழக முதல்வரை தியாகராஜ முதலியாரும் போட்டி போட்டுப் புகழ்ந்து வந்ததெல்லாம் ஊரறிந்த உண்மை.

1970 அக்டோபர் 2ந் தேதி உச்சவரம்புச் சட்டம் அமுலாகும் என்பது தெரிந்ததும், தஞ்சை மாவட்டத்திலுள்ள நிலங்களை செப்டம்பர் 30ந் தேதி பத்திரத்தில் விற்பனை சாசனம் (Sale deed) எழுதி விட்டு அக்டோபர் 4-ந் தேதி சென்னை பிராட்வே பத்திரப்பதிவு அலுவலகத்தில் ரிஜிஸ்தர் செய்யப்பட்டுள்ளது. (3933-3934- 3935-3936-3937-3938-3939 of 1970) இப் பத்திரங்கள் எல்லாம் வி. எஸ். டி. தியாகராஜ முதலியார் குடும்பத்துக்குள்ளேயே நிலப் பாத்தியங்கள். செட்டில்மெண்ட்கள் கிரயங்கள் நடந்திருக்கின்றன.

தியாகராஜ முதலியார் தனது திருமணமாகாத மகள் குமாரி ராஜம் மீனாட்சிக்கு 3935 எண் பத்திரத்தில் ரூபாய் அறுபதினாயிரம் மதிப்புள்ள சொத்தை செட்டில்மெண்டாக எழுதி வைத்திருக்கிறார்.

உயர்நிலைப் பள்ளிக்கும், சென்னையிலுள்ள கண் மருத்துவ மனைக்கும் சொத்துக்கள் எழுதிவைக்கப் பட்டுள்ளன.

**ஆதித்தன் கல்விக் கட்டளை**

2. திமுக அமைச்சரவையில் கூட்டுறவுத் துறை அமைச்சராக இருப்பவர் ஆதித்தன். அவர் பெயரில் ஆதித்தன் கல்வி கட்டளைக்கு (Aditanar Educational Insitute) தமிழ் நாட்டில் பல இடங்களில் நிலம் இருந்தன. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் நிலமீட்சிப் போராட்டத்தையொட்டி 1970 ஜூன், ஜூலை மாதங்களில் விற்பனை செய்யப்பட்டன. பல இடங்களில் பல முறைகளில் அவருடைய பத்திரிகைகளில் வேலை பார்க்கும் ஊழியர்கள் பெயருக்கே கிரயம் எழுதப்பட்டுள்ளன. சென்னை பத்திரம் பதிவு அலுவலகத்தில் 8013/1970 பத்திர எண் திருச்சி மாவட்டம் புதுக்கோட்டை ஆலங்குடி அருகில் சம்மட்டி விடுதி கிராமத்தில் 217 ஏக்கர் 11 செண்டும் ரூ. 25,830க்கு பலர் பேருக்கு ஜூலை மாதத்தில் கிரயம் முடிக்கப்பட்டுள்ளது.

இதுபோல நெல்லை மாவட்டம் தாதன்குளம் நிலங்களும் பிரித்துக் கிரயம் செய்யப்பட்டிருக்கிறது.

திருவாரூர் தியாகராஜ முதலியாரும், 'மாண்புமிகு' ஆதித்தனும்—திமுக அரசுக்குத் தெரியாதவர்களல்ல. அரசின் சட்டங்கள் எப்படியெல்லாம் வளைந்து கொடுக்கின்றன; வசதிக்குத் தக்கபடி வளைக்கப்படுகின்றன என்பதற்கு இது எடுத்துக்காட்டாகும். இன்னும் ஏராளமான ஏமாத்துகளை சாட்சியங்களுடன் எடுத்துக்கூற முடியும்.

காங்கிரஸ் நில உச்சவரம்புச் சட்டத்தை மிச்சவரம்புச்சட்டம் என்று மறைந்த அண்ணாதுரை கூறினார். அவருடைய கூற்று திமுக அரசின் உச்சவரம்புக் குறைப்புச் சட்டத்துக்கும் பொருந்தும் என எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

முதல்வர் கருணாநிதி காமராஜருக்கு பதில் கொடுத்த அதேவேகத்தில்—தன் ஆட்சியில் நிறைவேற்றப்பட்ட உச்சவரம்புச் சட்டத்திலுள்ள குறைகளையும் போக்க வேண்டும். குடும்பச் சொத்துக்கு வரம்பு கட்ட வேண்டும். உபரிநிலம் கிடைக்க வழிவகுக்க வேண்டும். மடங்கள், கோவில்கள் மற்றும் விதிவிலக்குகளை ரத்துச்செய்ய வேண்டும், உழுபவனுக்கு நிலத்தில் உரிமை கிடைக்க வேண்டும். இதையே தமிழ்நாட்டிலுள்ள உழைக்கும் உழவர் பெருங்குடி மக்கள் முதல்வர் கருணாநிதியிடம் எதிர் பார்க்கிறார்கள்.

நன்றி: அலை ஓசை

## முக்கிய அறிவிப்பு

ஜனசக்தி சந்தாதாரர்களுக்கும் ஏஜெண்டுகளுக்கும் தெரிவிப்பது:

ஜனசக்திக்கு பணம் அனுப்புபவர்கள் சரியான விலாசத்தையும், எதற்காக பணம் அனுப்புகிறீர்கள் என்ற விவரத்தையும் மணியார்டர் கூப்பனில் தெளிவாகக் குறிப்பிடுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

நிர்வாகி,
ஜனசக்தி.

## குடியாத்தம் திருமகள் ஆலையில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம்

குடியாத்தம் திருமகள் மில்ஸ் நிர்வாகம் தொழிலாளர்களின் 19 அம்சக் கோரிக்கைகளை ஏற்றிட வேண்டுமென்பதற்காக 6 நாட்களாக தங்கள் வேலையை முடித்தபிறகு ஆலைக்குள்ளேயே தங்கி அறவழிப் போர் நடத்தி வந்தனர். எவ்வித பலனும் கிட்டாது போகவே முன்பே அறிவித்தபடி 23—2—72 முதல் உள்ளிருப்பு வேலைநிறுத்தப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பதாக பஞ்சாலைத் தொழிற்சங்கக் கூட்டுப் போராட்டக் குழுச் செயலாளர் அறிவித்துள்ளார்.

24-2-72

# யாரைக் கண்டும் அஞ்ச வேண்டாம்

## என். ஜி. ஓ. மாநாட்டில் தோழர் எம். கல்யாணசுந்தரம்



மாநாட்டின் முதல் நாள் நிகழ்ச்சியில் கலந்துகொண்டு கம்யூனிஸ்ட் தலைவர் கல்யாணசுந்தரம் பேசியதாவது:

இந்த நிகழ்ச்சியில் கலந்து கொள்வது எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது. நீங்கள் மிகவும் சாதாரணமான கோரிக்கைகளைத்தான் வைத்துள்ளீர்கள் (கைதட்டல்) இதற்கே இவ்வளவு சிரமப்பட்டு மாநாடு கூட்டி வற்புறுத்த வேண்டி இருக்கிறது. நியாயத்திற்குப் போராட உரிமை இல்லையென்றால் ஜனநாயகம் செத்துவிட்டது என்று அர்த்தம்.

நீங்கள் 4 கோடி மக்களின் ஊழியர்களே தவிர, ஆளும் கட்சி எதுவானாலும் அதற்கல்ல!

முதலில் நீங்கள் கடமையைச் செய்யவேண்டும். அமைச்சர்களுக்கோ, எம்.எல்.ஏக்களுக்கோ, அதிகாரிகளுக்கோ பயந்து அல்ல. ஆனால் மக்கள் நலனையும், பொறுப்பையும் உணர்ந்து கடமையைச் செய்யவேண்டும். வேறு யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை. மத்திய அரசிலும், மாநில அரசிலும் கிட்டத்தட்ட 1 கோடி ஊழியர்கள் உள்ளனர். இவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்துவிட்டால் ஜனாதிபதி கிரிக்கே தந்தி கொடுக்கலாம். அரசையே ஆட்டிப் படைக்கலாம். (கைதட்டல்) எனவே நீங்கள் யாரைக் கண்டும் அஞ்சவேண்டிய அவசியமில்லை.

இங்கு முதலமைச்சரே நிதியமைச்சராகவும் இருக்கிறார். அதுதான் நமக்குள்ள கஷ்டம். "கலைஞர் கண்ணீரைத் துடைப்பார்" என்று கவியரங்கம் நடத்தப் போகிறீர்கள். ஆனால் உண்மையில் கலைஞர் உங்கள் கண்ணீரைத் துடைக்கமுடியாது. நீங்கள்தான் அவருடைய கண்ணீரைத் துடைக்க வேண்டும். (கைதட்டல்) அதை நாளைக்கு நீங்கள் காணப்போகிறீர்கள். (சிரிப்பு)

வெறும் சம்பள உயர்வினால் மட்டும் உங்கள் கண்ணீரைத் துடைக்கமுடியாது, விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தி ஒரே சீராக கன்யாகுமரியிலிருந்து காஷ்மீரம்வரை வைத்திருக்க வேண்டும், இன்றேல் என். ஜி. ஓக்கள் வாழ முடியாது.

நீங்கள் ஆட்சியில் மாற்றம் கொண்டுவந்தீர்கள். அதுமட்டும் போதாது. சமுதாயத்திலும் மாற்றம் கொண்டுவர வேண்டும். அரசியல் என்பது யாருக்கு வரவேற்புக் கொடுப்பது, எந்த அமைச்சருக்கு மாலை போடுவது என்பதல்ல. இந்தச் சமுதாயத்தை எப்படி மாற்றுவது என்பதைப் பயிலுகிற கலைதான் அரசியல்.

கட்சி மாற்றமல்ல— ஆள் மாற்றமல்ல— ஆனால் சமுதாய மாற்றம். அதுதான் இன்றுள்ள பிரச்னைகளுக்கெல்லாம் தீர்வு காணும் வழியாகும், என்று பலத்த கைதட்டலுக்கிடையே பேசினார்.

### அமைச்சர் பெருமக்கள்

இரண்டாம் நாள் நிகழ்ச்சியில் தமிழக அரசின் நான்கு அமைச்சர்கள் கலந்து கொண்டனர். தமிழக முதல்வர் கருணாநிதி, கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன், உணவு அமைச்சர் ப. உ. சண்முகம், பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் இராஜாராம் ஆகிய நால்வரும் கலந்து கொண்டனர். அவர்களை வாழ்த்தி வரவேற்றும் போற்றிப் புகழ்ந்தும், நடக்கவேண்டிய சடங்குகள் அனைத்தும் முறையாகவும், சரியாகவும் நடந்தேறின. அதன்பின் மாநாட்டுத் தலைவர் சிவ-இளங்கோ அரசு ஊழியர்களின் பத்து அம்சக்கோரிக்கைகளை விளக்கும் வகையில்தமது தலைமை உரையை நிகழ்த்தினார். அதன் பின் அமைச்சர்களும் ஒவ்வொருவராகப் பேசினார்.

### குமுறலும் கொந்தளிப்பும்

மருத்துவப்படி, வீட்டு வாடகைப்படி, ஊதிய உயர்வு ஆகியவை பற்றி மாநாட்டு மேடையில் முதல்வர் அறிவிப்பார் என்று பெரிதும் எதிர்பார்த்தனர். ஆனால் முதல்வரின் அறிவிப்புகள் மாநாட்டுக்கு வந்திருந்த என் ஜி ஓக்களுக்கு மிகப்பெரிய ஏமாற்றத்தை அளித்தது. அதனால் பலரிடம் குமுறலும், கொந்தளிப்பும் ஏற்பட்டது.

பிற்பகல் நிகழ்ச்சியில் பேசிய பலரும், முதல்வர் தங்களின் நியாயமான கோரிக்கைகளைத் தட்டிக் கழித்ததால்அவற்றைப் பெற நேரடி நடவடிக்கையில் இறங்க வேண்டும் என்று வற்புறுத்தினர். மத்திய நிர்வாகக் குழு உடனே கூடி எத்தகைய நடவடிக்கையில் இறங்குவது என்பதை ஆராயவேண்டும் என்கிற முடிவுடன் பிரதிநிதிகள் வீடு திரும்பினர்.

# கோவை குடிநீர் திட்டம் பற்றி தி. மு. க. செயலாளர் புகார் உண்மைக்கு மாறானது

## கம்யூனிஸ்ட்டுக் கட்சியின் மறுப்பு அறிக்கை

கோவை நகருக்கான சிறுவாணி குடிநீர்த் திட்டம் பற்றித் தி மு க.வின் கோவை மாவட்டச் செயலாளர் எஸ். ஏ. ராஜமாணிக்கம் விடுத்துள்ள அறிக்கையை மறுத்து இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கோவை மாவட்டக் குழு விடுத்துள்ள அறிக்கை:

கடந்த சில நாட்களாக தி.மு.க. பொதுக்கூட்டங்களில் கம்யூனிஸ்ட் கட்சியை தாறுமாறாகவும் வெறித்தனமாகவும் தாக்கிப் பேசிவருவதைப் பத்திரிக்கைகளில் பார்த்தோம். குறிப்பாக 18-2-72ம் தேதி அன்று காந்திபுரம் 100 அடி ரோட்டில் நடைபெற்ற திமுக பொதுக்கூட்டத்தில் திமுக மாவட்டச் செயலாளர் ராஜமாணிக்கம் பேசியபோது சிறுவாணித்திட்டம் நிறைவேறாததற்குக் கம்யூனிஸ்டுகள்தான் காரணம் என்று கூறியதாக நவ இந்தியா (19-2-72) பத்திரிக்கையில் படித்தோம். ராஜமாணிக்கத்தின் அபாண்டமான இந்தக் குற்றச்சாட்டு ஆதாரமற்றதும், விஷமத்தனமானதும் ஆகும்.

### தி. மு. கவின் குறுக்குவழி

சிறுவாணிக் குடிநீர்ப் பிரச்சினை, விலைவாசி உயர்வு, தொழிலாளர்கள் பிரச்சினை, விவசாயிகள் பிரச்சினை, மூன்று படி அரிசித் திட்டம், மின்சாரக் கட்டண உயர்வு ஆகிய மக்களைப் பாதிக்கும் பிரச்சினைகளில் திமுக அரசின் கொள்கைகள் மக்களுக்குப் பாதகமாக இருப்பதால் இன்று மக்கள் ஒன்றுபட்டுப் போராட்டதில் இறங்கியுள்ளனர். திமுக அரசின்மீது திமுகவினருக்கும். மக்களுக்கும் நம்பிக்கை குறைந்து வருகிறது என்பதுதான் யதார்த்த உண்மை. இந்தப் பலவீனத்திலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள திமுக குறுக்கு வழியில் இதரக் கட்சிகளின் மீது பழியைப் போட்டுத் தங்களின் கையாலாகாத் தனத்தை மறைக்கவும், மக்களைத் திசை திருப்பவும் ராஜமாணிக்கமும் மற்றுமுள்ள பேச்சாளர்களும் இதை ஓர் இயக்கமாக நடத்தி வருகின்றனர்.

இதைக் கண்டு கம்யூனிஸ்ட் கட்சி அதிர்ச்சியடையவில்லை. இது அவர்களுடைய மாநிலந் தழுவிய கம்யூனிச எதிர்ப்பு இயக்கத்தின் ஓர் அம்சமாகும். கொள்கையில்லாத கட்சிகள் கையாளும் நடைமுறை இது என்பது உலக அனுபவம்.

### குற்றச்சாட்டுக்கள் பற்றி

சிறுவாணித்திட்டம்: கோவை நகரத்தில் குடிநீர்ப் பற்றாக் குறையைத் தீர்க்கச் சிறுவாணித் திட்டத்தை விரிவு படுத்தவேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி கிட்டத்தட்ட 15 ஆண்டுகளாக கோவை நகரமன்றத்திலும், தமிழக அரசிடமும் இடைவிடாமல் போராடிவநதுள்ளதை அனைவரும் அறிவர். இந்த பிரச்சினை கேரள அரசும், தமிழக அரசும் இன்றைய நிலையிலும் பேசித் தீர்க்க வேண்டிய பிரச்சினையாகும். இந்தபேச்சுவார்த்தையில் இரண்டு அரசுகளின் அணுகு முறைகள் பற்றியும், இந்தப் பிரச்சினை ஒரு முடிவுக்கு வராமல் நீண்டுபோவதற்கு தமிழக அரசிடம் ஒரு நிலையான கொள்கை இல்லாததே காரணம் என்பதும் கேரள, தமிழக அரசுகளின் பேச்சுவார்த்தைகள் பற்றிப் பத்திரிக்கைகளில் வரும் செய்திகளிலிருந்து அனைவருக்கும் தெரியும்.

அரசின் இந்தப்பலவீனத்தை மூடிமறைக்கவும், மக்களை முக்கியப் பிரச்சினைகளிலிருந்து திசைதிருப்பவும் கம்யூனிஸ்ட் கட்சியின் மேல் பழிபோடவும் நடைபெறும் முயற்சிதான் ராஜமாணிக்கத்தின் பேச்சு.

### பொதுமக்களின் சிந்தனைக்கு

கோவை மக்களின் குடிநீர்ப் பிரச்சினை தீர கேரள அரசுடன் பேசி இத்திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டுமென்று திமுக அரசுக்கும் அதன் தலைவர்களுக்கும் உண்மையிலேயே விருப்பம் இருக்குமானால் மலையாளி தமிழன் என்ற இனப்பிரச்சினையைக் கிளப்புவதுதான் இந்த அவசரப் பிரச்சினையைத் தீர்க்கும் திமுகவின் பண்பா? அண்டை மாநிலத்துடன் விரோதத்தை வளர்த்துக்கொண்டு இந்தப் பிரச்சினைக்குத் தீர்வுகாணமுடியுமா? இத்தகைய போக்கு திமுக அரசின் அரசியல் பலவீனத்தைத்தான் காட்டுகிறது.

சமீபத்தில் திமுகவும், கழக அரசும் மக்கள்விரோதக் கொள்கையை மறைக்க தோழமைக் கட்சிகளை சாடுவதும் ஜாதி, இனவெறியைத் தூண்டி வருவதும் கண்டிக்கத் தக்கது. மக்களை திசைதிருப்பவென்றே திமுக தோழர்கள் விரிக்கும் எந்த வலையிலும் கம்யூனிஸ்ட் கட்சி விழாது என்பதை திமுக தோழர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறோம்.

கம்யூனிஸ்ட் கட்சித் தோழர்களைத் தனிப்பட்ட முறையில் சாக்கடைப் பாணியில் தாக்கினால் கம்யூனிஸ்ட் தோழர்களும் ஆத்திரப்பட்டு உங்கள் பாணியில் சாக்கடையில் இறங்குவார்கள் என்றும் இதைவைத்து தமிழகத்தின் அரசியல் நடத்தலாம் என்றும் எண்ணும் உங்கள் எண்ணம் வெற்றிபெறாது என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

- அமைதி காக்க—
- வாக்குப் போராட்டங்களில் குண்டர்களின் தாக்குதலில் இருந்து தொழிலாளர்களைப் பாதுகாக்க—
- விவசாயிகள், விவசாயத் தொழிலாளர் போராட்டங்களுக்கு துணை நிற்க—
- பட்டி தொட்டியெங்கும் மக்கட் பணியாற்றிட—

# மக்கள் தொண்டர்படை

## மாவட்டம்தோறும் பயிற்சி முகாம்!

### தென் ஆற்காடு மாவட்டம்

| | | |
|---|---|---|
| ஒலக்கூர் (திண்டிவனம் வட்டம்) | மார்ச் | 5 |
| தழுதாளி ,, | ,, | 6 |
| குண்ணம் ,, | ,, | 7 |
| கணக்கன்குப்பம் (செஞ்சி வட்டம்) | ,, | 8, 9 |
| தூக்கணாம்பாக்கம் (கடலூர் வட்டம்) | ,, | 15, 16 |
| பெருமாத்தூர் (சிதம்பரம் வட்டம்) | ,, | 17, 18 |
| பெண்ணாடம் (விருத்தாசலம் வட்டம்) | ,, | 20, 21 |
| முடியனூர் (கள்ளக்குறிச்சி வட்டம்) | ,, | 22, 23 |

பயிற்சி தருபவர்:
வட்டாரத் தளபதி—தோழர் கலைமணி

### மதுரை மாவட்டம் தொண்டர்படை முகாம்

உத்தமபாளையம் — மார்ச் 20, 21, 22, 23
பயிற்சி தருபவர்:
மாநில தளபதி—தோழர் பொறைக்கலம்

### இராமநாதபுரம் மாவட்டம்

சத்திரப்பட்டி — மார்ச் 22 முதல் 24 வரை
சுந்தரராஜபுரம், ராஜபாளையம் — மார்ச் 2வது வாரம்
பயிற்சி தருபவர்:
வட்டாரத் தளபதி—தோழர் வெள்ளைச்சாமி

### திருச்சி மாவட்டம்

காவேரி நகர் (புதுக்கோட்டை) — மார்ச் 4 முதல் 6 வரை
பயிற்சி தருபவர்:
வட்டாரத் தளபதி—தோழர் கே. சங்கிலி

### தஞ்சை மாவட்டம்

அனைத்துத் தாலூகா, வட்டாரங்களில் தொண்டர்களுக்கு பயிற்சி பெற்ற வட்டாரத் தளபதிகள் பயிற்சி அளித்து வருகிறார்கள்.

மாநில மக்கள் தொண்டர் படை உதவித் தளபதி தோழர் எம் எஸ் கணபதி மேற்பார்வையிட்டு வருகிறார்.

### சென்னை

பிப்ரவரி 27 முதல் தொண்டர்களுக்கான பயிற்சி நடந்துகொண்டிருக்கிறது. மார்ச் மாதம் முழுமையும் பயிற்சி நடைபெறும் மாவட்ட தொண்டர்படைத் தளபதி தோழர் எஸ். சுந்தரம் பயிற்சி கொடுத்துக்கொண்டிருக்கிறார்.

சென்னை ஹார்பர் தொழிலாளர்களின் தொண்டர் படைப் பயிற்சி பிப்ரவரி 27 தொடங்கி மார்ச் வரை நடைபெறும் வட்டாரத் தளபதி தோழர் அல்லாபக்ஷ் பயிற்சி அளித்துக்கொண்டுள்ளார்.

தமிழ் மாநில மக்கள் தொண்டர்படைத் தளபதி தோழர் எம். பொறைக்கலம் சுற்றுப்பயணம்:

| | |
|---|---|
| மார்ச் 20 முதல் 23 | —உத்தமபாளையம் |
| ,, 24 | —நெல்லை மாவட்டம் |
| ,, 25 | —திருப்பத்தூர் |
| ,, 26 | —ராஜபாளையம் |
| ,, 27 | —திருச்சி |

கே. டி. ராஜு
மாநில மக்கள் தொண்டர்படை பொறுப்பாளர்

**விமர்சனம் :**

# திக்குத் தெரியாத காட்டில்!

பயங்கரமான காடு ஒன்றின் நடுவே இருக்கிற அம்மனை வணங்கிட ஓர் இளம் தம்பதி தங்கள் புதல்வியுடன் செல்கின்றனர்.

சிறுமி காட்டினுள் காணாமல் போய் விடுகிருள்.

அவளைத் தேடிக் கண்டு பிடிக்க தாயும் தந்தையும் பிரிகின்றனர்.

அதே காட்டில்—

சிறையில் இருந்து தப்பித்து வந்த இரண்டு கைதிகளும் நுழைகின்றனர்.

அந்தக் கைதிகளைத் தேடி ஒரு இன்ஸ்பெக்டர் இரு கான்ஸ்டேபிள்கள் காட்டில் திரிகின்றனர்.

இரண்டு வேட்டைப் பிரியர்கள் காட்டிலே துப்பாக்கியுடன் அலைகின்றனர்.

இவர்கள் எல்லாம் தவிர 'சமுதாய நோயாளிகள்' (ஹிப்பிகளைப் போன்ருேர்) 'வருத்தமில்லா வாலிபர்கள்' என்ற பெயரில் சிலர் அந்தக் காட்டின் நடுவே உள்ள நீரோடையில் கும்மாளம்போட வந்து சேருகின்றனர்.

காட்டிலேயுள்ள யானை, புலி, குரங்கு, முதலை போன்ற கொடிய மிருகங்களும் பறவையினங்களும் வேறு நடித்துள்ளன.

வழக்கமான தமிழ்ப்படங்களை விட்டு மாறி நவீனமான ஒரு தமிழ்ப்படமாக ராம்குமாரின் 'திக்குத் தெரியாத காட்டில்' வெளி வந்திருக்கிறது.

கதையை நாகேஷ். வி. எஸ். ராகவன் போன்ருேர் எழுதிய தாக அறிவிக்கிருர்கள்.

கதையைவிட சம்பவங்களை, பல்வேறு ஆங்கிலப் படங்களைப் பார்த்ததின் விளைவாக அவர்கள் உருவாக்கியிருக்கும் திருப்பங்கள் நன்ருக உள்ளன.

ஜெயலலிதாவும் முத்துராமனும் காட்டில் குழந்தையைத் தவறவிடும் பெற்ருேராக வருகின்றனர். காட்டில் குழந்தையைத் தேடுவது அவர்கள் வேலை. நன்ருகத் தேடுகிருர்கள். அடக்கஒடுக்கமான ஒரு இளம்தாயின் வேடத்தில் ஜெயலலிதாவைப் பார்க்கும்போது அழகாகவே இருக்கிறது.

இரு கான்ஸ்டேபிள்களாக வி. கே. ராமசாமியும் நாகேஷும் தோன்றி கலகலப்பூட்டுகின்றனர்.

தப்பிவந்த இரு கைதிகள் நம்பியாரும் வி. எஸ். ராகவனும். நம்பியாருடைய முழுத் திறமையையும் இப்படத்தில் காணலாம். அவருடைய ஒப்பனையும் முகபாவமும் மிரட்டல் அரட்டலும் அந்தக் காட்டில் இருக்கும் பயங்கர மிருகங்களைக் காட்டிலும் அவரை பயங்கரமாகத் தோற்றமளிக்க வைத்திருக்கிறது. படத்தின் பரபரப்புக்கே நம்பியார் பாத்திரம்தான் துணை செய்கிறது.

வேட்டைக்காரர்களில் ஒருவராக மேஜர் சுந்தரராஜன் வருகிருர்.

வருத்தமில்லா 'வாலிபர்கள்' 'தொந்தியும் தொப்பையுமாக நீரோடையில் குளிக்கிற காட்சி அருவெறுப்பூட்டுகிறது.

வழிதவறிய சிறுமியுடன் வழி தவறிய ஒரு குட்டி யானையையும் துணை சேர்த்திருப்பது சுவையூட்டுகிறது.

என். சி. சக்கரவர்த்தி சிரமப்படாமல் டைரக்ட் செய்திருக்கிருர்.

காரில் ஜெயலலிதா முத்துராமன் போகிற, பேக் புரொஜக்ஷன் தவிர—முழுக்க முழுக்க காடுகளிலேயே படமாக்கியிருக்கிருர்கள். காமிராக் கலைஞர் லோகநாதன் முழுப் பாராட்டுக்கும் உரியவர்.

செயற்கையான அரங்க அமைப்புக்களை பார்த்துப் பார்த்துச் சலித்துப் போன தமிழ் ரசிகர்களுக்கு இயற்கையான காட்டில் செடிகொடிகளையும், மரம்-குன்றுகளையும், நீரோடைகளையும் அந்த இயற்கை எழிலுடன் காணுகிற வாய்ப்பை இப்படம் தருகிறது.

— அறந்தை நாராயணன்



சோஷலிஸ நாடு செக்கோஸ்லாவேகியாவின் திரைப்பட விழா சென்னையில் 24—2—72 அன்று துவங்கியது விழாவில் செக். அம்பாஸிடர் ஜெனிக் டிரிலிக் உரையாற்றுகிருர். மேடையில் விளாடிமிர் செக். (செக்கோஸ்லாவிய திரைப்பட டைரக்டர்) ஜெமினி கணேசன், பொஹமில் ஸ்டைனர் (செக். கலாச்சாரத் தூதுக்குழு தலைவர்) தமிழக அமைச்சர் சாதிக்பாஷா ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர்.

# கலை-இலக்கிய அரங்கம்

## செக். திரைப்பட விழா

செக்கோஸ்லாவியத் திரைப்பட விழா சென்னையில் 24-2-72 அன்றுதொடங்கியது செக். சோஷலிஸக் குடியரசு, இந்திய அரசின் செய்தித் தொடர்பு அமைச்சகம் ஆகிய வற்றின் சார்பில் இப்பட விழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இதனையொட்டி ஒரு தூதுக் குழு வந்திருக்கிறது. டாக்டர் பொஹமில் ஸ்டைனர் தலைமையில் வருகைதந்த அக்குழுவில் செக். திரைப்பட டைரக்டர் விளாடிமிர் செக் அவர்களும் வந்திருந்தார்.

'சாஸ்', 'கனவான்களே நான் ஐஸ்ஸனைக் கொன்று விட்டேன்', 'நகரம் பற்றி மனிதர் கள்', 'தாமிரக் கோபுரம்', 'ஆந்தி காமட்', 'ஜப்பிங் ஓவர் பெடல்ஸ் அகைன்', 'காதல் தந்திரங்கள்' ஆகிய 7 கதைப் படங்களும், 'தேருவும் செக் கோஸ்லாவியாவும்', 'நெருப்பு ஆறுகள்', 'புதிய கலோவாகியா', 'ஏ. பி. சி.', 'திமோல் அண்ட் தி கிரீன் ஸ்டார்', 'மெடாமொர்ஃபஸ்', 'தாயகம்' செய்தி விளக்கப் படங்களும் விழாவில் திரையிடப்பட்டன.

## மதிப்புரை

### சாதனை நிறைந்த கவிதை நூல்

தமிழ்க் கவிதையுலகில் பல புதிய போக்குகள் தெரிய ஆரம்பித்திருக்கின்றன. இப்போதுள்ள கவிஞர்களில் விரல் விட்டு எண்ணக்கூடிய சிலர் உருவத்திலும் உத்தியிலும் மாபெரும் சாதனைகளை நிகழ்த்தி தமிழ்க் கவிதை வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தைத் துவக்கியுள்ளனர். மேற்குறிப்பிட்ட சிலரில், சிலரே உள்ளடக்கத்திலும் பொறுப்புடனிருக்கிருர்கள். 'மீரா' (மீ. ராஜேந்திரன்) இந்தக் கடைசிச் சிலரில் ஒருவர்.

காலம் காலமாய் உள்ளதும் எல்லா மொழி இலக்கியத்தின் பெரும் பகுதியை ஆட்கொண்டதுமான 'காதலை'யே தன் கவிதைக்குப் பொருளாக எடுத்துக்கொண்டிருந்தாலும்,

"உனக்கென்ன, ஒரு பார்வையை வீசிவிட்டுப் போகிருய். என் உள்ளமல்லவா வைக்கோலாய்ப் பற்றி எரிகிறது."

என்று இவர் நளினமாகச் சொல்லும்பொழுது தலைப்பு மறந்து போகிறது.

இவரது சமூகப் பார்வை தெளிவாகவும் வசீகரமாகவும் இருக்கிறது.

"நிலத்தைப் பறிக்கப் போகிறேன் என்று என்னைக் கைது செய்தார்கள்."

என்ற இடத்திலும்,

"நான் இதுவரை ஏழைதான் இனிமேல்தான் பணக்காரனாக வேண்டும்"

என்ற இடத்திலும்,

"நீ எனக்குக் காதலைத் தந்தாய். அது உழைப்பாளியின் வியர்வையைப்போல் உயர்வானது"

என்ற முடிவுரையிலும் இவரைச் சரியாக அடையாளங் கண்டுகொள்ள முடிகிறது.

தமிழ்நாட்டின் மிகச் சிறந்த கவிஞரின் மிகச் சிறந்த கவிதைத் தொகுப்பு இது.

—கந்தர்வன்.

கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்.

ஆசிரியர்: மீரா.
விலை ரூபாய் இரண்டு
விற்பனை உரிமை :
மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை-1.

### அவர் வணங்கும் 'தேவி !'

ஊரில் பிரபலமான வட்டிக்கடை முதலாளியிடம் அவரது நண்பர் கேட்டார்: "நீங்கள் பெரிய தேவி பக்தர் என்று சொல்கிருர்களே... நீங்கள் வணங்கும் தேவி யாரோ ?"

வட்டிக் கடைக்காரர் சொன்ன பதில் :

"லேவாதேவி !"

### திண்டிவனம் ஜீவா கலைமன்றம்

கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டங்களில் கலை நிகழ்ச்சிகள், நடத்தவும் நாடகங்கள் நடத்தவும் ஏற்ற வகையில் திண்டிவனம் ஜீவா கலை மன்றம் நிகழ்ச்சிகளைத் தயாரித்துள்ளது.

சிதம்பரம் ஆர். நாகராஜன் குழுவினர் நடத்தும் "நீங்களே சொல்லுங்கள்!" என்ற கலை நிகழ்ச்சியும், சிதம்பரம் நாகராஜன், சுரேஷ் மோகன் ஆகியோர் நடத்தும் 'அருகதை' என்ற மேடை நாடகமும் இந்தக் குழுவினரது நிகழ்ச்சிகளாகும்.

நிகழ்ச்சிகள் நடத்த விரும்புவோர் விபரங்களுக்கு பின்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ஜீவா கலை மன்றம்
64, மாரியம்மன் கோயில் தெரு
திண்டிவனம்
(தென் ஆற்காடு)

## தக்கபதில் சொல்வீர் !

**-வெ. நா. திருமூர்த்தி-**

தக்கபதில் சொல்வீர் முதல்வரே-மக்கள்
சந்தேகங் களைத் தீர்ப்பீர் கலைஞரே !
மக்களை வாழ்விக்க மாநில சுயாட்சியா ?
மறைமுகமாய் வளர்க்க பிரிவினை சூழ்ச்சியா ?

அதிக அதிகாரம் மாநிலங்களுக் கெல்லாம்
அளிக்க வேண்டுமென்ற போராட்டம்—டில்லி
அளிக்க மறுத்திடில் கிளர்ச்சியை துவக்கியே
அங்கங்கு நடத்திடும் ஆர்ப்பாட்டம்—இங்கு
இதயமற்ற பெரும் முதலாளி வர்க்கத்தின்
ஈனச்சுரண்டலைத் தடுக்கவா ? — இல்லை
ஏழைத் தொழிலாளர் போராட்டங்களைக் கண்டால்
இரும்புக்கரம் கொண்டு அடக்கவா ?

அரசியல் அதிகாரம் அதிகம் கிடைத்தவுடன்
ஆட்சியில் மாற்றங்கள் நடக்குமா ? — மக்கள்
அனைவர்க்கும் உணவுடை வீடுவேலை போன்ற
அடிப்படை உரிமைகள் கிடைக்குமா ? — இங்கு
பரிவுடனே நிலப்பிரபுக்கள் நிலங்களை
பங்கீட்டு உழவர்க்கு கொடுக்கவா ? — இல்லை
பண்ணையாளர்களுக்கு பாதுகாப்புத் தந்து
வெண்மணி கொடுமைகள் நடக்கவா ?

இதுவரையில் உள்ள அதிகாரங்களைக் கொண்டு
எத்தனை ஆணைகளை எழுப்பினீர் ? — எங்கும்
ஏறும் அகவிலையை கட்டுப்படுத்தாமல்
எதை எதையோபேசி மழுப்புறீர் ! — இனி
புதிய சமூகத்தின் இளைஞர்தம் வாழ்வுக்கு
புதுப்புது தொழில்களை திறக்கவா ? — சிம்சன்
போராட்டங்களைபோல நாடெங்கும் நடக்காமல்
போலீசாரை விட்டு நொறுக்கவா ?

அரியாங்குப்பம் தனில் கம்யூனிஸ்ட் தலைவரின்
ஆதரவை நாடி ஓடுவீர் ! — எங்கள்
அரும் பெரும் தலைவரை வேதாரி என்று
அடுத்த கணம் வசைபாடுவீர் !
நிருவாகத் திறமை நுணுக்கமின்றி எந்த
நிகழ்ச்சியும் வெறும் பேச்சால் கெலிக்குமா ?—உலகில்
நிகரற்ற முசாபிர் ரகிமானும் உம்மைப்
நினைக்கும் பகற்கனவு பலிக்குமா ?

புதிய தமிழகத்தின் உரிமைக் கிளர்ச்சியில்
பொறுப்புடன் நாங்களும் சேருவோம் — அது
பொதுமக்கள் நலனுக்கு இடையூறுவரக் கண்டால்
போர்க்கொடி ஏந்தியே தீருவோம் — இனி
முதல்வரே உங்களது சுயாட்சியின் உட்பொருளை
முற்றிலும் மக்கள்முன் விளக்குங்கள் — எதும்
மூடி மறைக்காமல் கழகத்தின் கருத்தையும்
முரசொலியில் கொட்டி முழக்குங்கள் !

# வேலூர் நாராயணனுனல் வெளியே போ! விநாயகமானுல் உள்ளே வா!

“ கழகமே கலைஞர்—கலைஞரே கழகம் ! அவரை விமர்சிப்பவர்கள் கழகத்தின் விரோதிகள். அவர்கள் வெளியே போகலாம் ” என்ற ராஜப ஜையம் தி மு க மாநாட்டு முழக்கம் செயல் வடிவம் பெறத் தொடங்கிவிட்டது.

‘ அலை ஓசை ’ என்ற நடுநிலை நாளேட்டில் தொடர்பு கொண்டிருந்தார் என்கிற காரணத்திற்காக—

‘ அலை ஓசை ’ கழகம் சம்பந்தப்பட்ட செய்திகளை மட்டுமல்லாது, கழகத்தை விமர்சிக்கிற செய்திகளையும் வெளியிட்டு வருகிறது என்ற காரணத்திற்காக—

வேலூர் நாராயணன் தி மு கழகத்திலிருந்து ‘ சஸ்பெண்ட் ’ செய்யப்பட்டுவிட்டார்.

‘ அலை ஓசை ’ இதழைத் துவக்கிவைத்தவர் கருணநிதிதான்.

மாலைநேர ‘ முரசொலி ’யாக அது வெளிவரும் என்று எதிர்பார்த்தார்கள் போல் இருக்கிறது.

அந்தர் பல்டி விநாயகம் இப்போது தி மு கழகத்தில் சேர்ந்திருக்கிருர்.

இந்த திடீர் 777 திமுக விநாயகத்தின் வரவு சென்னையில் மர்மக் கதைகள் பலவற்றைச் சொல்லிவருகிறது.

பெரிய பெரிய சிக்கலான வழக்குகளில் மாட்டிக் கொண்டிருக்கிற பல கிரிமினல் பேர்வழிகளையெல்லாம் தேடித் தேடி பேரம் செய்கிருர்களாம். வழக்குகளை வாபஸ் வாங்கி கழகத்திலே சேர்த்துக்கொள்ளத் திட்டமாம்.

இப்படி—

கழகத்தின் உண்மையான ஊழியர்கள் பலர் வெம்பிப் பேசுகின்றனர்.

தி மு கழகத்தின் ‘ லட்சியங்களை ’யெல்லாம் ஏற்று அதன் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட பலர் ஒதுக்கப்படுவதும், ஆட்சிக் கட்சியின் அனுகூலங்களை அனுபவிக்க சமூக விரோதிகள் பலர் கழகத்தின் பக்கம் வருவதும், அப்படி வந்தவர்களை மாலையிட்டு வரவேற்று உபசரிப்பதும் கழக மேலிடத்தின் வாடிக்கையாகிவிட்டது !

இன்று வேலூர் நாராயணன்—நாளை ?

—அ.

# தோட்டத் தொழிலாளர் போராட்டம் சூடு பிடிக்கிறது!

சென்ற ஆண்டு நடைபெற்ற தேர்தலுக்குமுன், நீலகிரி, வால்பாறை தோட்டத் தொழிலாளிகள் சம்பள உயர்வு முதலிய கோரிக்கைகளுக்காக கிளர்ச்சி செய்ய முன்வந்தனர். ஆனுல் தேர்தலில் முற்போக்கு அணி வெற்றியடையவேண்டும் என்ற பரந்த நோக்கத்துடன் அக்கிளர்ச்சி தொடரப்படவில்லை. ஆனுல் தேர்தல் முடிந்து, அமைச்சரவை ஏற்பட்டபின், தங்கள் குறைகளை தீர்க்க நடவடிக்கை எடுக்கப்படும் என பல மாதங்கள் காத்திருந்தனர். ஆனுல் நடந்தது ஏமாற்றத்தை அளித்தது. விலைவாசி விஷம் போல் ஏறுவதுடன், ஒவ்வொரு குடும்பத்திலும் வேலையில்லாதவர் எண்ணிக்கை பெருகுவதும் அதே சமயத்தில் ஆள்குறைப்பு நடைபெறுவதும் நிகழ்ந்தது. அடுத்துள்ள கேரளத்தில் தோட்டத் தொழிலாளிகள் போராடி சம்பளவுயர்வு பெற்றுவிட்டனர். மற்றும் பல சலுகைகளை பெற்றுள்ளனர். முதலாளிகள் ஆள்குறைப்பு செய்வதுடன், சட்டம், முத்தரப்பு முடிவுகளைக்கூட ஒழுங்காக அமுல் செய்வதில்லை. இந்நிலையில், வால்பாறையில் ஸ்டான்மோர், அய்யர்பாடி ஆகிய தோட்டங்களிலும், நீலகிரியில் வெண்ட்வொர்த் தோட்டத்திலும் போராட்டங்கள் வெடிக்க ஆரம்பித்தன.

இந்த பின்னணியில் சென்ற டிசம்பரில், திமுக தொழிற் சங்கம் நீங்கலாக ஏனைய சங்கங்கள் ஒன்றுகூடி 10 அம்ச கோரிக்கைகளை வைத்து கிளர்ச்சி செய்ய முன் வந்தன. 31—1—72க்கு கோரிக்கைகள் நிறைவேற்றப்படவேண்டுமென அதிகாரிகளுக்கும், முதலாளிகளுக்கும் தாக்கீது அனுப்பப்பட்டது.

சென்ற இரண்டு மாதங்களில் நீலகிரி மாவட்டத்தில் பல்வேறு தோட்டப் பகுதிகளில் அனைத்து தொழிற்சங்க கூட்டங்களில், விளக்கப் பிரசாரம் தீவிரமாக நடைபெற்று வருகிறது. அத்துடன் சிம்சன் தொழிலாளிகளுக்கு ஆதரவாக ஜனவரி 11ம் தேதி, பல தோட்டங்களில் அனுதாப வேலை நிறுத்தம் நடைபெற்றது. 13—2—72ல் திமுக அரசின் தொழிலாளர் கொள்கை கண்டித்து, முக்ய நகரங்களில் அனைத்து சங்க கூட்டங்கள் நடைபெற்றன. மேற் சொன்ன நடவடிக்கைகளில் ஐஎன்டியூசியும் கலந்து கொண்டது.

இவ்வளவிற்கும் பின்னரும், முதலாளிகளோ, அரசோ, தோட்டத் தொழிலாளிகளின் குறைகளை போக்குவதில் அக்கறை காட்டுவதாகத் தெரியவில்லை. எனவே 10-3-72க்குள் குறைகளைத் தீர்க்க நடவடிக்கை எடுக்கப்படவில்லையெனில் நேரடி நடவடிக்கையில் இறங்குவதென முடிவு செய்யப்பட்டிருக்கிறது, அந்த அடிப்படையில 21-2-72ல் வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது. அனைத்துச் சங்க கூட்டணியில் ஐஎன்டியூசி சேராவிட்டாலும் நடவடிக்கைகளில் பங்கு கொண்டு வருகிறது. திமுக முடிந்தஅளவு சீர்குலைவில் முனைந்து நிற்கிறது.

எனினும் இன்றைய போராட்டப் புயல் அடிக்கும் சூழ்நிலையில் தோட்டத் தொழிலாளிகளும், தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொள்ள பொது வேலை நிறுத்தத்திற்கு தயாராகிக் கொண்டு வருகிருர்கள்.

## அறிக்கை

ஏஐடியூசி, எச்எம்எஸ், சிஐடியூ முன்னணி சங்கம் ஆகிய சங்கங்கள் அடங்கிய கூட்டுக் கமிட்டியின் அறிக்கை :

“சம்பள உயர்வு, போனஸ் சர்வீஸ் பண உயர்வு, ஓய்வு நாள் சம்பளம் போன்ற 10 கோரிக்கைகளை வைத்து போராட்டத்திற்கு ஜனவரி மாத ஆரம்பத்தில், நாம் தோட்ட முதலாளிகளுக்கு எச்சரிக்கை நோட்டீஸ் கொடுத்தோம். ஆனுல் இன்றுவரை, தோட்ட முதலாளிகளோ, தமிழக அரசோ இந்தக் கோரிக்கைகளை பற்றி எந்தவித பேச்சுவார்த்தையும் நடத்தாமல் காலம் கடத்தி நம்முடைய உரிமைகளை புறக்கணிக்கிருர்கள்.

இந்த சூழ்நிலையில், நம்முடைய நியாயமான உரிமைகளை பெற, நாம் ஒன்று சேர்ந்து மாபெரும் போராட்டம் நடத்துவதைத் தவிர வேறு வழியில்லை. சமீப காலத்தில் முதலாளி வர்க்கமும் தமிழக அரசும், தொழிலாளர்கள் போராட்டங்கள், கிளர்ச்சிகள் செய்த பிறகு தான் சலுகைகளை ஏற்றுக் கொள்ள முன்வந்திருப்பதை நாம் சிம்ஸன். ஆவடி டாங்க் தொழிற்சலை, சர்க்கரை ஆலை, கோவை பஞ்சாலைகள் ஆகிய போராட்டங்கள் மூலம் கண்டோம்.

எனவே, வருகிற மார்ச் மாதம் 10ம் தேதிக்குப் பிறகு குறிப்பிட்ட ஒருதினத்திலிருந்து தமிழகத்தில் உள்ள அனைத்து தோட்டத் தொழிலாளர்களும், சங்கம், கட்சி, பாகுபாடுகளை மறந்து, ஒன்றுபட்டு மாபெரும் போராட்டத்தில் இறங்க வேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிருேம்.

இப்போதிருந்தே எல்லா தோட்டங்களிலும் கூட்டுப் போராட்ட கமிட்டிகளை நிறுவி, போராட்டத்திற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ள வேண்டுகிருேம். அனைத்து சங்கத் தலைவர்களும் தோட்டங்கள் தோறும் பொதுக் கூட்டங்களுக்கு, ஏற்பாடு செய்துள்ளோம்.

செய்தி ; பி. வி. கிரி

# அமெரிக்க ஜனுதிபதியின்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

துயரங்களுக்கு அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் அப்பட்டமான தலையீடுதான் காரணம் என்பது உலகறிந்த உண்மை. குறிப்பாகவியத்நாம், லாவோஸ், கம்போடியா, கொரியா, முதலிய நாடுகளில் உள்ள மக்கள் படும் வேதனைகள், உலகின மனச்சாட்சிக்கே ஒரு சவாலாக உள்ளன. சீனுவைச் சுற்றிலும் உள்ள இந்த அண்டை நாடுகளின் நிலைமை பற்றி. அமெரிக்க-சீன கூட்டறிக்கையில் எதுவும் சொல்லப்படவில்லை.

அமெரிக்க ஜனுதிபதி நிக்சன் பரிவாரத்துக்குச் சீனத் தலைநகரில் சிறப்பு வரவேற்பு அளிக்கப்பட்ட அதே வேளையில், வியத்நாம் மக்கள் மீது அமெரிக்க விமானங்கள் கொடூரமாக குண்டு மழை பொழிந்தன.

சீன அரசாங்கத்தின் மறைமுக ஆதரவுடன்தான் இந்தப் பெருங்கொடுமை நடைபெறு வருவதாகச் செய்திகள் கூறுகின்றன. வியத்நாம் முதலிய பகுதிகளில் உள்ள மக்களுக்குச் சீனு தரும் ஆதரவு வெறும் வாயளவானது என்பதை எடுத்துக் காட்டப் போதுமான சான்றுகள் உள்ளன. தனது சொந்த நலனுக்காக வேண்டி. அண்டை நாடுகளின் மக்களை அமெரிக்க ஏகாதிபத்தியத்துக்குத் தாரைவார்த்துக் கொடுக்கச் சீனுவின் மாவோயிஸ்ட்டுகள் கொஞ்சமும் தயங்கவில்லை.

தைவானைப் பொறுத்தமட்டிலும், அது சீனுவின் பகுதி என்பதை அமெரிக்கா ஏற்றுக் கொண்டுள்ளது. இது முற்போக்கு சக்திகளுக்குக் கிடைத்த பெரிய வெற்றிதான். ஆனுல் இந்த வெற்றியைப் பெறுவதற்காகச் சீனு கொடுத்துள்ள விலை அதைவிடப் பெரியதாகவும் பயங்கரமானதாகவும் உள்ளது.

தனது சொந்த நாட்டின் ஒரு பகுதியான தைவானைத் தானே விடுவிக்கக் கையாலாகாமல் இத்தனை நாளும் விட்டுவைத்திருந்தது சீனு. இப்பொழுது, சீனுவோடு கைகுலுக்க ஏகாதிபத்தியம் முன் வரும்பொழுது, பண்டமாற்றைப்போல தனது பகுதியைப் பெறுவதற்காக வேண்டி, வியத்நாம், கொரியா முதலிய தென்கிழக்காசிய நாடுகளின் மக்களுடைய நலன்களை சீனு பலியிட்டுவிட்டது.

ஆகையினுல்தான், நிக்சனுடைய சீனப் பயணம்பற்றி வியத்நாம் ஜனநாயகக் குடியரசும், கொரிய மக்கள் ஜனநாயகக் குடியரசும் உற்சாகம் காட்டவில்லை. அந்த இரண்டு நாடுகளும், அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் கொடுமைகளை எடுத்து உரைப்பதில் ஈடுபட்டுள்ளன.

அமெரிக்க ஜனுதிபதி நிக்சன் சீனுவுக்குச் சென்று வந்ததனுல் யாருக்கு லாபம் ?

சீனுதான் லாபமடைந்தது என்று கூறுபவர்கள் உண்டு. தைவான்பற்றி அமெரிக்க நிலைபாடு மாறியதை அவர்கள் பெரிதுபடுத்துகின்றனர். ஆனுல் இத்தனைக்குப் பிறகும் சீன மக்கள் குடியரசை அமெரிக்கா இன்னும் அங்கீகரிக்கவில்லை என்ற முக்கியமான உண்மையை அவர்கள் மறந்துவிடுகின்றனர். மேலும், தென்கிழக்காசியாவில் தனது நிலைபாட்டை உறுதி செய்து கொள்ள, அமெரிக்கா பல சலுகைகளைப் புதிதாகப் பெற்றுள்ளது என்பதையும் அவர்கள் காண மறுக்கின்றனர்.

அமெரிக்க ஏகாதிபத்தியம் தான் வெற்றிபெற்றது எனச் சொல்பவர்கள் மற்றொரு அம்சத்தைக் காண மறந்துவிடுகின்றன. உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் நிக்சன் நிர்வாகம் பெற்ற மகத்தான தோல்வியைச் சரிக்கட்டுவதற்காகத்தான் நிக்சன் பீகிங் சென்ருர். ஆனுல், மிகப் பெரும் தவறுகள் இழைக்கப்பட்டுள்ளதனுல், இந்த இட்டுக்கட்டும் வேலைகள் பலிக்கப்போவதில்லை.

மொத்தத்தில் பார்த்தால், உலக நாடுகளுக்கும் சோஷலிச நாடுகளுக்கும் இடையில் ஏற்பட்டுவரும் நட்பைப் பிரிப்பதற்கான சூழ்ச்சி இது என்பது வெளிப்படை. ஏகாதிபத்தியவாதிகளும் சோஷலிசத் துரோகிகளும் இந்தப் பணியில் முழுமனதுடன் ஈடுபட்டுள்ளனர்.

இதற்கு முன்பும் சோவியத் எதிர்ப்பு, கம்யூனிச எதிர்ப்புச் சதிகள் பலவற்றை வரலாறு கண்டுள்ளது. அவைகளுக்குக் கிடைத்த அதேகதிதான் இந்தப் புதிய சதிக்கும் கிடைக்கப் போகறது என்பது சர்வ நிச்சயம்.

# சேலத்தில் கலை நிகழ்ச்சி

3-2-72 வியாழக்கிழமை இரவு 10 மணி அளவில் சேலம் ஜாகீர் அம்மாபாளையம் ‘‘ காட்டே ’ அரங்கில் ஜீவா கலா மன்றத்தார் நடித்த ‘‘ கலம் பதில் சொல்லும் ’’ நாடகம் சேலம் மாவட்ட கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் கே. வி. இராமசாமி தலைமை வகித்தார். சேலம் நகர கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் சி இளங்கோவன் நாடகத்தின் சிறப்பினையும் ஜீவா கலா மன்றத்தாரின் முயற்சியினையும் பாராட்டிப்பேசினுர்.

தோழர் கே. கணேசன் தீட்டிய ‘‘ தேவலோகம் to பூலோகம் ’’ என்னும் ஓரங்க நாடகமும் நடைபெற்றது.




**Statement about ownership and other particulars about “JANASAKTHI”**

**FORM IV**
**(See Rule 8)**

1. *Place of publication* ... Madras-1.
2. *Periodicity of publication* ... Weekly
3. *Printer's Name* ... M. Kalyanasundaram.
   *Nationality* ... Indian.
   *Address* ... 32, Broadway, Madras-1.
4. *Publisher's Name* ... M. Kalyanasundaram
   *Nationality* ... Indian
   *Address* ... 32, Broadway, Madras-1.
5. *Editor's Name* ... M. Kalyanasundaram
   *Nationality* ... Indian.
   *Address* ... 32, Broadway, Madras-1.
6. *Name and address of individuals who own the newspaper and partners or share-holders holding more than one per cent of the total capital.* — 1 M Kalyanasundaram Partner; 2 K Baladhandayutham „; 3 P. Manickam „; 4 A. S. K. „; 5 M. V Sundaram „; 109, Broadway, Madras-

I, M. Kalyanasundaram hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

(Sd.) M. KALYANASUNDARAM,
Signature of publisher.

Date : 1—3—1972.

# பஞ்சாலைத் தொழிலாளருக்கு ஆதரவாக சிறை ஏகினர்

## பாவியர் தம் அலட்சியத்தால் பலியாகினர்

## தொழிலாளி வர்க்கமே துயரக் கடலில் ஆழ்ந்தது, உணர்வை முறுக்கேற்றி நிற்கிறது!

## கம்யூனிஸ்ட் தியாகிகள் பட்டியலில் ஓர் இளஞ் சிங்கம்

# தியாக வேள்வியில் திருமலைசாமி

உடுமலைப்பேட்டை பழனி யாண்டவர் மில்லில் ப்ளோரும் ஜாபராகப் பணியாற்றிவரும் ரங்கசாமி நாயுடு என்றழைக்கப்படும் தோழர் சீரங்க நாயுடுவின் மூத்த புதல்வர் திருமலைசாமி ஆவார். திருமலைசாமிக்கு இரண்டு சகோதரர்களும், இரண்டு சகோதரிகளும் உடன் பிறப்புகளாக உள்ளனர். இவர்களுடைய பூர்வீகம் கோவை சங்கனூர் கிராமமாகும். திருமலைசாமியின் தந்தை கோ.ஜி.மி.தொ.ச. (ஏஐடியூசி) வில் உறுப்பினர்.

### கம்யூனிஸ்ட்

திருமலைசாமி எஸ்.எஸ்.எல்.சி. வரைக்கும் படித்து முடித்து பின்னர் உடல் நலமின்மையால் சிலகாலம் கல்வியைத் தொடர வில்லை. சென்ற ஆண்டுதான் உடுமலைப்பேட்டையில் பியூசியில் சேர்ந்து பயின்று வந்தார். அனைத்திந்திய மாணவர் பெருமன்றத்தின் லட்சியங்கள் அவரைக் கவரவே, பெருமன்றத்தில் தன்னை உறுப்பினராக அர்ப்பணித்துக் கொண்டார். மாணவர் பெருமன்றத்தின் வளர்ச்சிக்கு அயராது பாடுபட்டு வந்தார். உடுமலைக் கிளை மாணவர் பெருமன்றத்தின் அமைப்பாளர் பொறுப்பினை ஏற்று திறம்பட பணியாற்றிவந்தார். தொடர்ந்து பொது வாழ்வில ஈடுபட்டு வர தன்னை கம்யூனிஸ்ட் கட்சிக்காக அர்ப்பணித்து அதிலும் உறுப்பினர் ஆனர். உடுமலை அரசினர் கலைக் கல்லூரியில் மாணவர் கவுன்சில் உறுப்பினர்களில் ஒருவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### சிறையில்

போராட்ட குணமிக்க தொழிலாளிவர்க்கக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்துவந்த திருமலைசாமி தொழிலாளிவர்க்கத்திற்கு ஆதரவு தரும் வகையில், 25-2-72 அன்று நடைபெற்ற பஞ்சாலைத் தொழிலாளர்களின் மறியல் போராட்டத்தில் பங்கு பெற்று . கைது செய்யப்பட்டு கோவை மத்திய சிறையில அடைக்கப்பட்டார்.

### சிறை அதிகாரிகளின் அக்கறையின்மை

ஏற்கனவே திருமலைசாமிக்கு ஆஸ்த்மா நோய் இருந்தது என்பது உண்மை. ஆஸ்த்மாவிலிருந்து தற்காலிக விடுதலைக்கு மாத்திரைகள் சாப்பிட்டு வந்தார். 27ம் தேதி கோவை மத்திய சிறை மருத்துவ மனையில் வழக்கமாக சாப்பிட்டு வரும் மாத்திரைகள் இல்லை. அந்த மாத்திரைகளை வெளியிலிருந்து வாங்கிச் செல்லும் அக்கறை சிறிதும்கூட சிறை அதிகாரிகளுக்கு இல்லாமல் போய்விட்டது. எனவே மாத்திரை இல்லாததால் வழக்கமாக சாப்பிடும் மாத்திரை உட்கொள்ள இயலவில்லை. இதனுல் ஆஸ்த்மா நோய் முற்றிவிட்டது.

நோய் முற்றவே, திருமலைசாமி சிறைக் கம்பிகளுக்கிடையிலிருந்தே கூச்சலிட்டு அதிகாரிகளை அழைத்திருக்கிறு . நீண்ட நெடுநேரம் யாரும் வரவில்லை. கடைசியாக மருத்துவ கம்பவுண்டர் வந்து, என்ன நோய் என்பதையும் கேளாது, பரீட்சித்தும் பார்க்காமல் ஊசியை குத்திவிட்டுச் சென்றுவிட்டார். விடியற்காலை இவரது நிலை மிக மிகக் கவலைக்கிடமானது.

பின்னர் தான் சிறை மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டார். நோய்நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வழியை நாடாததால் மருத்துவ மனையில் மரணம் அடைந்தார். திருமலைசாமியின் மரணம் ஒரு பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

### அஞ்சலி

செய்தி கேட்டு பஞ்சாலைத் தொழிலாளர்களின் கூட்டுக் கமிட்டி செயலாளர் எஸ். என். காளியண்ணன், தலைவர் ராமசாமி நாயுடு, மற்றுமுள்ள செயல் கமிட்டி உறுப்பினர்கள், கம்யூனிஸ்ட் கட்சி மாவட்டப் பொறுப்பாளர் தோழர் பி நாராயணன், நாடாளுமன்ற உறுப்பினர் தோழர் கே. பாலதண்டாயுதம், கம்யூனிஸ்ட் கட்சி நகரக் கமிட்டி செயலாளர் தோழர் ஆர். ரெங்கசாமி ஆகியோர் சிறைச்சாலைக்கு விரைந்து சென்று துக்கம் விசாரித்தனர். இந்த துக்ககரமான சம்பவத்தை முன்னிட்டு 28—2—72 அன்று நடத்தப்படவிருந்த மறியல் போராட்டங்கள் தள்ளி வைக்கப்பட்டன துக்க தினம் கொண்டாடப்பட்டது. கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டிருக்கும் பஞ்சாலைத் தொழிலாளர்கள், பஞ்சாலைத் தொழிலாளர்கள் மௌன அஞ்சலி செலுத்தினர்.

அன்று பிற்பகல் 12 மணிக்கு கோவை ராமநாதபுரத்திலுள்ள மறியல் தலைமைச் செயலகத்திற்கு (ஐஎன்டியூசி) உடல் எடுத்துச் செல்லப்பட்டது உடுமலையிலிருந்து கோவை வந்தடைந்த திருமலைசாமியின் பெற்றோர்கள், உறவினர்கள், நண்பர்கள் கண்ணீர் மல்க வருந்தினர். 57000 தொழிலாளர்களுக்கு ஆதரவாக தன் மகன் வீர மரணம் எய்தினன் என்ற செய்திமட்டுமே பெற்றவர்களுக்கும், உறவினர்களுக்கும் பெருமை தந்தன.

### செங்கொடி போர்த்தி

கூட்டுக் கமிட்டி தலைமைக் காரியாலயத்தில் பார்வைக்காக வைக்கப்பட்டிருந்த தியாகியின் உடல் மீது செங்கொடி போர்த்தப்பட்டது மாணவர் பெருமன்றக் கொடியை மாணவத் தோழர் கிருஷ்ணன் போர்த்தினர். மாலை 3 மணிக்கு உடல ராமநாதபுரத்திலிருந்து கணபதி மயானத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. தொழிற் சங்கத் தலைவர்கள் தலைமையில் பத்தாயிரக் கணக்கில மௌன ஊர்வலத்தில் தொழிலாளர்கள் பங்கு பெற்றனர். பாதை இரு மருங்கிலும் வழி நெடுக பொது மக்கள் மௌன அஞ்சலி செலுத்தினர். கணபதி மயானத்தில் உடல் அடக்கம் செய்யப்பட்டது. பின்னர் இரங்கல் கூட்டம் கூட்டுக் கமிட்டித் தலைவர் இராமசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது. தோழர் எஸ். என். காளியண்ணன் (செயலர்) தியாகி திருமலைசாமியின் வாழ்க்கைக் குறிப்பினைப் பற்றி விவரமாகக் கூறினர்.

இரங்கல்கூட்டத்தில் தோழர் கே. பாலதண்டாயுதம் எம்.பி. கலந்து கொண்டு அஞ்சலி செலுத்தி பேசுகையில் திருமலைசாமி இறப்பதற்கு தமிழ்நாடு அரசின் முதலாளிகளின் பிடிவாதமும், சிறை மருத்துவத் துறையின் அலட்சியத்துக்கும், அக்கறையற்ற தன்மையுமே காரணம் என்பதை சுட்டிக் காட்டினர்.

தொடர்ந்து அனைத்திந்திய மாணவர் பெருமன்றத்தின் தமிழ்மாநிலக்குழு பொதுச்செயலாள தோழர் க. மாணிக்கம், கோவை மாவட்டச் செயலர் சு. ப. கிருஷ்ணன் ஆகியோர் பேசினர். அனைத்து தொழிற் சங்கத்தலைவர்களும் அனுதாபம் தெரிவித்தனர்.

### வீரவணக்கம்

"கோவை மாவட்டப் பஞ்சாலைத் தொழிலாளர்களின் நியாயமான போராட்டத்திற்கு கோரிக்கைகளை வலியுறுத்தி நடைபெற்று வரும் மறியல போராட்டத்தில் பங்கு கொண்டு கோவை மத்திய சிறையில் அடைக்கப்பட்ட அனைத்திந்திய மாணவர் பெருமன்றத்தின் உடுமலைக்கிளை அமைப்பாளரும், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினருமான சிறையில் உயிர் நீத்த உடுமலையைச் சார்ந்த தோழர் திருமலைசாமியின் வீர மரணத்திற்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் கோவை மாவட்டக்குழு செங்கொடி தாழ்த்தி வீரவணக்கம் செலுத்துவதோடு. அன்னரின் குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

முதலாளித்துவத்தின் பிடிவாதத்தையும் தமிழ்நாடு அரசின் அசட்டைப் போக்கையும் எதிர்த்து 57 ஆயிரம் பஞ்சாலை தொழிலாளர்களின் வீரமிக்கப் போராட்டத்தில் சிறையேகி விலை மதிக்கமுடியாத உயிரை தொழிலாளி வர்க்கத்திற்குத் தியாகம் செய்த வீரனின் போராட்ட உணர்வைக் கண்டு கம்யூனிஸ்ட் கட்சி பெருமை கொள்வதுடன் தியாகி திருமலைசாமி எந்த லட்சியத்துக்காக உயிர் நீத்தாரோ அந்த லட்சியம் நிறைவேறும் வரையில் போராட்டம் நடைபெறும் என்ற வீர சபதத்தை மேற்கொண்டு போராடுங்கள் என பஞ்சாலைத் தொழிலாளர்க்கு கம்யூனிஸ்ட் கட்சி கோவை மாவட்டக்குழு அறைகூவல்விடுகிறது."— இவ்வாறு இந்தியகம்யூனிஸ்ட் கட்சியின் கோவை மாவட்டக்குழு அஞ்சலி அறிக்கையில் கூறியுள்ளது.

-பி. நாராயணன்

# அஞ்சேலா டேவிஸ் விடுதலை!

தீரமிக்க அமெரிக்கப் பெண்மணி அஞ்சேலாடேவிஸ், ஜாமீனில் விடுதலை செய்யப்பட்டுள்ளார். பத்து லட்சம் ரூபாய்கள் ஜாமீனில் அவரை அமெரிக்க அரசாங்கம் வெளியில் விட்டுள்ளது. பல வேறு நிபந்தனைகளுக்கு உட்பட்டதாக இந்த விடுதலை உள்ளது. இருந்தபோதிலும்கூட, சிறைக்கூடத்திலிருந்து அஞ்சேலாவை வெளியே கொண்டுவரும் போராட்டத்தில் முதல் வெற்றி கிடைத்துள்ளது. அஞ்சேலா டேவிசை இறுதியாக விடுதலை செய்வதற்கான பேரியக்கத்தை உலகு எங்கிலும் உள்ள முற்போக்காளர்கள் தொடர்ந்து நடத்திக்கொண்டுள்ளனர்.

உறுதிமிக்க இந்தக் கம்யூனிஸ்ட் தலைவியை, அமெரிக்கக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் கஸ் ஹால் நேராக வந்து வரவேற்றுர்.

# குடியாத்தத்தில் போலீஸ் தாக்குதல்

## டாக்டர் கண்ணபிரான் தாக்கப்பட்டார்

குடியாத்தம் பஞ்சாலைத் தொழிலாளர்போராட்டத்திற்கு ஆதரவாக சர்வ கட்சியின் சார்பில (திமுக நீங்கலாக) 53 பேர் பல முன்னுல் மறியல் செய்தமைக்காக கைது செய்யப்பட்டுள்ளனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரும், முன்னுள் சட்டமன்ற உறுப்பினருமான வி. கே. கே. தண்டராமன், ஸ்தாபன காங்கிரஸ் நகர துணை செயலாளர் ஜே. கே. நடேசன், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி பொருளாளர் பி.வி. நடராஜன், இந்திரா காங்கிரஸ் செயலாளர் டி. வி. கொண்டப்பா நகர மன்ற உறுப்பினர்கள் எச். எம். அத்தாவுல்லா, ஏ. எஸ். உலகநாதன், வடாற்காடு மாவட்ட மாணவர் மன்ற தலைவர் டி. எஸ். ஆர். தாஸ், பஞ்சாலைத் தொழிலாளர் போராட்ட குழு செயலாளர் ஆர். எஸ். மணி, தொழிற்சங்க தலைவர்கள் சீ.து. கோவிந்தராஜி, கே. ஷண்முகம், வி. முனிசாமி ஆகிய பிரமுகர்கள் உள்பட 53 பேர்கள் கைது செய்யப்பட்டு 15 நாள் ரிமாண்டில் வேலூர் மத்திய சிறைக்குக் கொண்டு போகப்பட்டுள்ளனர்.

சர்வ கட்சியின் சார்பில் 1—3—72 நதேதி குடியாத்தம் முனிசிபல் ஆபீஸ அருகிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு முக்கிய வீதிகளின் வழியாக வலம் வரும்போது காந்திசௌக் என்னும் இடத்தில் போலீசாரால் தடிகொண்டு தாக்கியபோது தொழிற்சங்கத் தலைவர் டாக்டர் ஜி. கண்ணபிரான், அவர்களுக்கு முகத்திலும், குடியரசு தலைவர் எம். பெருமாள் அவர்களுக்கு முதுகிலும் பலமான காயம் பட்டுள்ளது.

அதன் பிறகு குடியாத்தம் பஸ் நிலையத்தில ஊர்வலத்தின் மீது போலீஸ்காரர்களால் தடியடிப் பிரயோகம் செய்யப்பட்டு 15 நபர்களுக்கு பலமான காயம் பட்டு அரசாங்க ஆஸ்பத்திரியில் சிகிட்சை பெற்று வருகின்றனர்.

இது தவிர லாரியில் வந்து கொண்டிருந்த திருமுருகன் லாரி டிரைவருக்கும், போர்ட்மேனுக்கும் ஒருவருக்கும், பஸ் நிலையத்தில் கடைகளின் உள்ளே இருந்தவர்களை எல்லாம் வெளியே இழுத்து இழுத்து போலீஸ்காரர்கள் வெறித்தனமாக அடித்தனர்.

கோவை தொழிலாளர் போராட்டத்திற்கும், குடியாத்தம் திருமகள், ராஜேஸ்வரி ஆலைகளின் தொழிலாளர் போராட்டத்திற்கும் ஆதரவு தெரிவித்து குடியாத்தம நகரில் இன்று முழு அடைப்பு (பந்த்) நடைபெற்றது.

### வளர்கிறது திமுகவினர் வன்முறை

# ராமநாதபுரம் மாவட்டச் செயலர் கூத்தக்குடி ஷண்முகம் கூட்டத்தில் கல்லெறி

## தி. மு. க.வினர் காலித்தனம்

29—2—72 மாலை சிவகங்கை நகரில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் மாவட்டச் செயலாளர் தோழர் கூத்தக்குடி சண்முகம் பேசிக் கொண்டிருந்தபோது திமுகழக ரௌடிகள் கல்லெறிந்தனர்.

மேடை மீது சோடா புட்டிகளை வீசினர்.

காலிகளின் கல்லெறியைக் கண்டும் காணாதது போலீஸார் நின்றுகொண்டிருக்கவே பேசிக் கொண்டிருந்த கூத்தக்குடி சண்முகம், "போலீஸாரே! நீங்கள் அமைதியை நிலைநாட்டுகிறீர்களா? அல்லது நாங்களே கவனித்துக்கொள்ளட்டுமா?" என்று முழங்கினர்.

அதன் பிறகு போலீஸார் கூட்டத்தில் அமைதி ஏற்படுத்தினர்.

ஜனசக்தி

# பட்டதாரி ஆசிரியர்களுக்கு

# பட்ஜெட்டிலும் பட்டை நாமம்

"வாய்மையும் உண்டுகொல்
வாய்மையும்
உண்டுகொல்
வாக்குக் கொடுத்திங்கு
நாக்குப் பிறழ்ந்தபின்
வாய்மையும் உண்டுகொல்
வாய்மையும் உண்டுகொல்!"

என்று மக்கள் மன்றத்திலே படையெனத் திரண்டு வந்து சில நாட்களுக்கு முன்னர் எழுத்தறிவிக்கும் தெய்வங்கள் வழக்குரைக்க வந்தார்கள், இளங்கோ படைத்த கண்ணகி வழக்குரைக்க வந்தபோது, "தேரா மன்னா! செப்புவதுடையேன்" என்று ஆறாத சினத்துடன், தீராத வேதனையுடன் குற்றச்சாட்டைத் தொடக்கியதாகப் படித்திருக்கிறோம்.

இப்பொழுது கேட்பதோ புதுவகையான வழக்கு. இந்த பட்டதாரி ஆசிரியர்கள் தாங்கள் படும் பாட்டை எடுத்துக் கூறும் நவீன வழக்கு. ஐயோ! அடுத்தவர்களுக்கெல்லாம் அள்ளிக் கொடுத்து விட்டு, எங்கள் அடி வயிற்றில் மட்டும் குறிபார்த்து அடித்து விட்டீர்களே! என்று குறை சொல்லவில்லை,

எங்களுக்கு மட்டும் அநீதி இழைக்கப்பட்டிருக்கிறதே என்ன தவறு கண்டீர்! பிற துறையினர்க்குப் பொருந்தும் நீதி, எங்களுக்கு மட்டும் பொருந்தாதது ஏன்? நீதியைக் காட்டி நீதியை விழுங்குவானேன்? எல்லோருக்கும் வாழ்க்கைச் செலவு கூடிவிட்டதாகக் கூறும்பொழுது, எங்களுக்கு மட்டும் ஏதாவது தர்மச் சத்திரத்தில் தனி மடுதி போட்டிருக்கிறீர்களா? எல்லோரும் ஒரே விலையில் பொருளை வாங்கும்பொழுது எங்களது வாழ்க்கைப் பாரத்தைக் குறைக்கவும் வழி வேண்டாமா? என்பதுதான் பட்டதாரி ஆசிரியர்களின் முறையீடு.

இந்த முறையீடு ஓராண்டுக் காலமாக தமிழ்நாட்டில் ஒலித்து வருகிறது. இதனால் பாதிக்கப்பட்டுள்ள பட்டதாரி ஆசிரியர்கள் இருபதாயிரம் பேராகும்.

இவர்கள் பல்கலைக்கழகப் பட்டப்படிப்புடன், ஆசிரியர் பயிற்சிக்காக ஓராண்டு மேலும் பயின்று இரு பட்டங்களைப் பெற்றவர்கள். படித்து, காலத்தையும், பணத்தையும் செலவிட்டு, தேர்வு எழுதி, மதிப்பெண் பெற்று, தகுதி காட்டி வாங்கிய பட்டங்கள் இவை.

இவர்கள் தரும் பயிற்சியால் எண்ணற்ற மாணவர்கள் அறிவுப் பயிற்சி பெற்று வருகின்றனர்.

இரண்டாவது சம்பளக் குழுவின் பரிந்துரைப்படி இவர்களுக்கும் சம்பள விகிதம் மாற்றி அமைக்கப்பட்டது உண்மை. ஆனால், இதே கல்வித் தகுதியுடன் பிற துறைகளில் பணிபுரிவோருக்குக் கொடுக்கப்பட்ட உயர்வு, இந்த அப்பாவி ஆசிரியர்களுக்கு மட்டும் கொடுக்கப்படவில்லை.

அமைச்சர்களிடம் முறையிட்டார்கள்.—ஆவன செய்யப்படும் என்று அவர்களும் பதில் சொன்னார்கள்.

பின்னர் நியாயம் வழங்கப்படும் என்று திட்டவட்டமான வாக்குறுதியே கொடுத்தார்கள், ஆயினும் ஓராண்டு ஓடியதுடன் வாக்குறுதியும் எங்கோ ஓடிவிட்டது.

கடைசியாக 1972-73க்கான பட்ஜெட்டிலாவது பரிகாரம் கிடைக்கும் என்று எதிர்பார்த்த ஆசிரியர்களுக்கு ஆயிரமாயிரம் அனுதாபச் சொற்களுடன் ஆலாபனம் முடிந்துவிட்டது!

தலைமேல் வரி வரவில்லையே என்பதற்காக, எண்ணெய் தேய்த்து ஒரு முழுக்குப் போடலாம். எல்லாம் நாம் செய்த பாக்கியம்!

எங்கெங்கோ காணப்படும் ஏற்றத்தாழ்வுகளை எடுத்துக் காட்டி சொல் ஏவுகணைகளை ஏவிவிடும் ஆட்சியாளர்கள், ஆசிரியர்களிடம் காட்டும் அசட்டைப்போக்கு, அருவருப்பைத்தான் ஏற்படுத்துகிறது.

தமிழ்நாட்டில் பணிபுரியும் பட்டதாரி ஆசிரியர்களுக்கு மாதச் சம்பளம் ரூ 290 வழங்கப்படுகிறது. ஆனால், "குட்டி" மாநிலமான பாண்டிச்சேரியில், ரூ 416 வழங்கப்படுகிறது.

தமிழ் நாட்டைக் காட்டிலும் பாண்டிச்சேரியின் வருமானம் அதிகம் என்றோ, அதிக அதிகாரம் கொண்டது என்றோ, நிலப்பரப்பில் பெரிது என்றோ சொல்லிவிட முடியாது.

பாண்டி மாநிலத்தில் பட்டதாரி ஆசிரியருக்கு மாதம் ரூ 416 வழங்கும்போது, தமிழ் நாட்டில் மனுநீதி ஆட்சியில் ரூ 290 மட்டும் வழங்குவது என்ன வகை நீதி? என்று புரியவில்லை.

தமிழ் நாட்டிலேயே நெய்வேலியில் உள்ள தொழில்நுட்பப் பள்ளியில், இதே கல்வித் தகுதியுடன், இதே பாடத்தை, இதே அளவு நேரம், இதே தரத்தில் கற்பிக்கும் பட்டதாரி ஆசிரியருக்கு மாதம் ரூ 400 வழங்கப்படுகிறது.

ஆனால் டாக்டர் ஆட்சியில் பட்டதாரி ஆசிரியர்களுக்கு ரூ 290 மட்டும்தான் வழங்கப்பட்டு வருகிறது!

இதனைப் பரிசீலனை செய்து திருத்தியமைத்து, குறைபாடுகளைத் தீர்க்குமாறு பட்டதாரி ஆசிரியர்கள் முறைப்படி, சட்டப்படி, அமைதி வழியில் முறையிட்டுப் பார்த்தனர்.

பதில் கிடைக்கவில்லை. பிப்ரவரி 25ம் நாள் கூண்டோடு விடுப்பு எடுத்து தங்களது குறைகளை உணர்த்திக் காட்டினர்.

ஆனால், அந்த அமைதியான போராட்டத்தை உடைக்கவும் திமுக முயன்றது. சில இடங்களில் ஆசிரியர்கள் தாக்கப்பட்டனர். சில இடங்களில் ஆசிரியைகள் அவமானப்படுத்தப்பட்டனர்.

"என்ன வாத்தியாரே! பள்ளிக்கூடம் போய்விட்டு, வீடு திரும்பும்போது பெண்டாட்டி பிள்ளை வீட்டிலிருக்கவேண்டாமா?" என்று சில துண்டு போட்ட பெரியவர்கள் தமிழனுக்கே உரிய தலையாய நாகரிக பாணியில் மிரட்டியிருக்கிறார்கள்.

தன்மானமுள்ள ஆசிரியர் குலம் கொதிப்படைந்து, குமுறிக் கொண்டிருக்கிறது.

இருப்பினும். அவர்கள் தரத்திற்கு பிளேடுகளையும் சைக்கிள் சங்கிலிகளையும் ஆயுதங்களாக கொள்ள முடியாது.

ஆசிரியர்களும் அவைகளைத் தூக்க நேரிட்டால் இந்த நாட்டை நேராகச் சுடுகாட்டுக்குத்தான் பாடை கட்டித் தூக்க வேண்டும். ஆனால், அவர்கள் அநியாயமாக மிரட்டப்பட்டால், மாணவர்களும், பொது மக்களும், குறிப்பாக தொழிலாளிகளும் அவர்களது உரிமைகளைக் காத்துக்கொடுக்கத் திரளவேண்டும்.

இது மனித குலத்திற்குச் செய்யும் சேவையாகும்.

பட்டதாரி ஆசிரியர்களைப் போலவே, ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் வேறு பல தொல்லைகளுக்கு உட்படுத்தப்பட்டுள்ளனர்

பாதுகாப்பு நிதிக்காக லாட்டரி சீட்டை விற்கச் சொல்லி, அதற்குரிய பணத்தை சம்பளத்திலேயே வெட்டி எடுத்த சோகச் செய்திகள் தொடர் கதையாக நீளுகின்றது.

குடும்பக் கட்டுப்பாட்டிற்கு ஆள்பிடித்து வரவேண்டிய நிர்ப்பந்தமும் ஓய்ந்தபாடாக இல்லை. ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் கல்வி எழுச்சி நாள் கொண்டாட இருப்பது பாராட்டத்தக்க முயற்சி.

இதற்கு ஆதரவாக மக்கள் பெருவெள்ளம் திரளவேண்டும்.

பெரியோர்களே! நம் பிள்ளைகளின் வருங்காலம் ஆசிரியர்களின் உழைப்பிலிருந்துதான் உருவாக வேண்டும். அவர்கள் மன நிம்மதியுடன் உழைப்பதற்குரிய நல்ல சூழ்நிலையை நாம் தான் உருவாக்கித் தரவேண்டும்.

இன்று ஆசிரியர்கள் எழுப்பிப் போராடிக் கொண்டிருப்பதன் அடிப்படைக் காரணங்கள் வெறும் ரூபாய் சம்பந்தப்பட்டது மட்டும் அல்ல.

தமிழ்நாடு அரசு கல்வித் துறையில் பணிபுரியும் சிந்தனையைச் செதுக்கும் ஆசிரியர்களைப் பற்றி வைத்துள்ள அவக்கேடான, கல்வியைப் பாழடிக்கும் தவறான கொள்கையை இடித்துக்கட்டித் திருத்துவதற்குத்தான்.

எனவே, பட்டதாரி, ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களின் நியாயமான கோரிக்கைகளுக்கு சகல ஜனநாயக சக்திகளும் முழு ஆதரவைக் கொடுக்க வேண்டும். இதன் இரண்டாவது கட்டப் போராட்டமாக சென்னைக் கோட்டைமுன்னால் பட்டதாரி ஆசிரியர்கள் மார்ச் 7 8, 9 தேதிகளில் உண்ணாநோன்பிருக்கப் போவதாக அறிவித்துள்ளனர்.

அவர்களது அறப்போராட்டம்வெல்கவென வாழ்த்துகிறோம். இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின், தமிழ் மாநிலக் குழுவின் முழு ஆதரவையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

## முஸ்லீம் பெண்கள் கொடுமைப்படுத்தப்பட்டனர்

### கழகத் துண்டர்களின் துணையுடன் போலீசின் காலித்தனம்!

இராமநாதபுரம் மாவட்டம் பெரிய பட்டணத்தில் கொடிய சம்பவங்கள் 23-2-72 அன்று நடைபெற்றிருக்கின்றன.

அன்று மாலை சங்குகுளித் தொழிலாளர்களையும் முஸ்லீம் இளைஞர்களையும் கைகளைக் கட்டி போலீசார் மிருகத்தனமாகத் தாக்கினர்.

சப் இன்ஸ்பெக்டர் தலைமையில் போலீஸ்காரர்கள் முஸ்லீம் கோஷாப் பெண்களை கொடுமைப்படுத்தினர்.

ஆண்கள் வெளியே போயிருக்கும் வேளையில் நடு இரவில் முஸ்லீம் வீடுகளுக்குள் நுழைந்து கோஷாப் பெண்களை மிரட்டியிருக்கின்றனர்.

ஒரு தாய், குழந்தை பெற்று 4 மணிநேரமேயாகியிருந்தது.

அந்த வீட்டைப் பிரித்து போலீஸார் உள்ளே நுழைந்தனர். முஸ்லீம் தாயைக் கொடுமைப்படுத்தினர்.

வேறொரு வீடு. நான்குநாள் பச்சைக் குழந்தையுடன் படுத்திருந்தாள் தாய்.

பால் வடியும் பச்சைக் குழந்தையின் உடலின் மேலே சப் இன்ஸ்பெக்டரின் பூட்ஸ் கால் மிதிபட்டுக் காயம்.

"அய்யோ!" என்று அந்தத் தாய் அலறியும் கேளாமல் வீட்டைப் பிரித்தெறிந்தனர்.

வேறொரு வீடு.

முஸ்லீம் கோஷா பெண்கள் கன்னிப் பெண்கள் நடு இரவானதால் மேலாடை இன்றி உறங்கிக்கொண்டிருந்தனர்.

உள்ளே நுழைந்தன வெறியர்.

"அய்யோ! மேலாடை அணிந்து கொள்கிறோம்" என்று அந்த முஸ்லீம் பெண்கள் கெஞ்சியும் கேளாமல், "என்னடி மேலாடை வேண்டியிருக்கிறது?" என்பன போன்ற கேவல மொழி பல மொழிந்து ரகளை செய்தனர் போலீஸார்.

பெண்கள் பலர் அடிபட்டக் காயத்துடன் காணப்படுகின்றனர்.

இத்தனைக் காலித்தனங்களையும் உள்ளூர் திமு கழகக் காலிகள் வழிநடத்த கலெக்டரின் போலீஸ் காட்டு தர்பார் நடத்தியிருக்கிறது.

இந்த வெறியாட்டத்தைக் கண்டித்து 3-3-72 அன்று சர்வகட்சக் கண்டனப் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

மாவட்டச் செயலாளர் தோழர் கூத்தக்குடி சண்முகம் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் கண்டன முழக்கமிட்டார்.

## பஞ்சாலைத்தொழிலாளர் தமிழகம் தழுவிய பொது வேலைநிறுத்தம்

### மதுரை மாநாட்டின் மகத்தான முடிவு

தமிழ்நாடு முழுவதிலுமிருந்த அனைத்துப் பஞ்சாலைத் தொழிற்சங்கப் பிரதிநிதிகளின் மாபெரும் மாநாடு மதுரையில் 25-2-72-ம் தேதியன்று நடைபெற்றது. ஐஎன்டியூசி தலைவர் எம். எஸ். ராமச்சந்திரன் தலைமை வகித்தார். ஐடியூசி சார்பில் தோழர்கள் ஏ. எம். கோபு, ஆர். எச். நாதன், எம். ராமமூர்த்தி உள்பட 267 பிரதிநிதிகள் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

மாநாட்டில் கோவை பஞ்சாலைத் தொழிலாளர்களின் வீரமிக்கப் போராட்டத்தை வாழ்த்தியும் பாராட்டியும் வரவேற்றும் அவர்களின் 19 கோரிக்கைகளை வற்புறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அத்துடன் இப்போராட்டத்தை விரிவுபடுத்தி 2-3-1972-ம் தேதி முதல் தமிழகம் தழுவிய போராட்டமாக நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டது.

இத் தீர்மானத்தின்படி மார்ச் 2-ம் நாள் தமிழ்நாடு முழுவதும் பஞ்சாலைத்தொழிலாளர் வேலை நிறுத்தம் நடைபெற்று வருகிறது.



ஆசிரியர், அச்சிட்டவர், வெளியிட்டவர் எம். கல்யாணசுந்தரம், ஜனசக்தி அச்சகம், 82-பிராட்வே, சென்னை-1. JANASAKTHI, 82 Broadway, Madras-1